உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 10 } இரக்தாட்சிஸ்ரீ ஐப்பசிமீ கஉ { பகுதி 4
1924ஸ்ரீ அக்டோபர்மீ 17உ

## கடவுள் வணக்கம்.

இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யனுதினமும்
வழுத்தல் செய்வாம். (1)

பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகிப்
போத மாகித்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி
யருளானோர்க் ககம்புறமென் றுன்னாத பூரணவா
னந்த மாகி
யிருடீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம். (2)

நினையுநினைவு நினையன்றி யில்லை நினைத் திடுங்கால்
வினையென் றொருமுத னின்னை யல்லாது விளைவதுண்டோ
தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச் செந்தாமரையா
மனையும் பொன்மன்றமு நின்றாடுஞ் சோதி மணிவிளக்கே. (3)

உள்ளத் தையுமிங் கெனையு நின்கையினி லொப்பு வித்துங்
கள்ளத் தைச்செய்யும் வினையால் வருந்தக் கணக்குமுண்டோ
பள்ளத் தில்வீழும் புனல்போற் படிந்துன் பரம வின்ப
வெள்ளத் தின்மூழ்கி னர்க்கே யெளிதாந்தில்லை வித்தகனே. (4)

## அரும்பொருள் விளக்கம்.

1. இந்திரஜாலம்=ஜாலம் காட்டுவோன் தன் மந்திர வல்லமையால் இல்லாததை உள்ளதுபோல் காட்டும் வித்தை.

கானல் நீர்=கொடிய வெயிற் காலத்தில் ஊஷர பூமியில் சூரிய கிரணங்களின் அனல் நீர் நிலைபோல் தோன்றுவது. இதற்குப் பேய்த்தேர் என்றும் பெயர்.

இவ்வுலகம் இந்திர ஜாலத்திற்கும், கனவிற்கும், கானல் நீருக்கும் ஒப்பிடப்பட்டிருக்கிறது. இந்த உண்மை, ஞானம் வந்தபின்பே அனுபவமாய்த் தோன்றும்.

ஈசுவரனே ஜாலக்காரன். மாயையே அவன் வல்லமை. உலகமே அவன் காட்டும் ஜாலம். ஜாலம் பொய். ஜாலக்காரன் மெய். கண்ணுக்குத் தோன்றாத அவன் வல்லமை அவனில் அடங்கியிருக்கிறது. அதுபோல் மாயையால் ஈசுவரன் தோற்றுவித்த இவ்வுலகம் பொய். நிலையில்லாதது. ஈசுவரன் ஒருவனே மெய்யான பொருள்.

கனவு திருட்டாந்தத்தில்—கனவு காணும்போது அது உண்மையானதாகவே தோன்றுகிறது. ஆனால் விழித்தபின்போ கண்ட கனவு பொய்யென்று தெரிகிறது. அவ்வாறே அஞ்ஞான நிலையிலிருக்கும் வரையில் உலகம் மெய்போன்றே தோன்றும். ஞானம் உதிப்பின் பொய்யென்று—அசத்து சடம் என்று—அனுபவமாய்த் தோன்றும்.

இதில் ஒரு கேள்வியுண்டாகலாம். அதாவது விழித்ததும் கனவு மறைந்தேபோகிறது. ஆனால் ஞானம் வந்தபிறகும் உலகம் மறையாமல் தோன்றிக்கொண்டே யிருக்கிறதே என்று வினவலாம். அதற்குத்தான் கானல் நீர் திருட்டாந்தம். கானல் நீரைப் பொய்யென்று ஒருவன் அறிந்த பின்னும் அது தோன்றிக்கொண்டுதான் இருக்கும். ஆனால் மறுபடியவன் அது நீரென்று மயங்கமாட்டான். கானல் நீரில் அனுபவமில்லை. உலகில் அனுபவ மிருக்கிறதே யெனில், அப்போது கனவு திருட்டாந்தம். கனவு பொய்யாயினும் அதில் அனுபவமுமிருக்கிறது. இவ்வாறு இத்தகைய விஷயங்களில் வேண்டியமட்டும் ஏகதேசமாகவே திருட்டாந்தங்களைக் கவனித்தல் வேண்டும்.

சிற்பரத்தால்=சித்சொரூபமான பரம்பொருளி னருளால்.

அழியாத=நித்தியமான.

தற்பரத்தை=தத்பதப் பொருளாகிய பரமான்ம சொரூபத்தை.

சார்ந்து=கலந்து.

இப்பாசுரம் சுவாமிகள் தமது ஞானாசிரியராகிய மௌனதேசிக சுவாமிகளைத் துதித்துக் கூறியது.

2. பொருளாகக் கண்ட பொருளெவைக்கும் முதற்பொருளாகி = காணப்படும் நாமரூபமுடைய சகல பொருள்களுக்கும் காரணமான பொருளாய்.

போதம்=ஞானம்; அறிவு.
மிடி=வறுமை; குறைவு.
அருள் ஆனோர்க்கு=அருள் மயமானவர்களுக்கு; அருள்பெற்றோர்க்கு.
இருள் தீர விளங்குபொருள்=அஞ்ஞானமாகிய இருள் ஒழியும்படிப் பிரகாசிக்கின்ற வஸ்து.

அலைதிவலை நுரைகடலில் உதித்து ஒடுங்குவதுபோல் அகில அண்டங்களனைத்தும் பரமாத்மாவினிடத்திலேயே ஒடுங்குகின்றனவாதலின், 'காணப்படும் பொருள்களுக்கெல்லாம் மூலப்பொருள்' என்றார்.

பரமான்மா அறிவே சொரூபமாக வுடையதாதலின் 'போதமாகி' என்றார்.

"பொருளாகக்கண்ட பொருளெவைக்கும் முதற்பொருள்" என்றது சத்தின் இலக்ஷணம்.

"போதமாகி" என்றது சித்தின் இலக்ஷணம்.

"ஆனந்தமாகி" என்றது ஆனந்த இலக்ஷணம்.

ஆகவே "சச்சிதானந்த சொரூபியாகிய பரம்பொருளை வணங்குவாம்" என்பது இதன் கருத்தாம்.

3. நினையும் நினைவு=நினைக்கும் எண்ணம்.

மனமே நினைப்பதெனினும் சிவன் அறிவித்தால் அறியும் தன்மையது. ஜடமாகிய மனம் அவனை யன்றி இயங்காது. ஆதலின் "நினைவும் நின்னையன்றி இல்லை" என்றார். வினைக்குத் தக்க பயனை யூட்டுவிப்பவன் ஈசுவரனே. அந்த வினைக்குத் தக்கபடி புத்தி செல்லும். 'புத்தி கன்மானுசாரணி'. அதை நடத்துபவனும் ஈசுவரனே. ஆதலின் "வினையும் நினையன்றி விளைவதில்லை" என்றனர்.

தனையும் தெளிந்து உன்னைச் சார்ந்தோர்=தன்னையுமறிந்து, அதாவது ஆன்மசாட்சாத்கார மடைந்து, பரமாத்மாவாகிய உன்னில் கலந்த ஞானிகள்.

(அத்தகைய ஞானிகள் உள்ளமாகிய சிதாகாயத்தில் பகவான் ஆனந்தத்தாண்டவம் புரிகிறார்.)

பொன்மன்றம்=(சிதம்பரத்திலுள்ள) பொன்னம்பலம்.

(ஞானிகள் உள்ளமாகிய சிதாகாயத்தில் பரமன் தாண்டவம் புரிகிறான் என்ற குறிப்பே சிதம்பர க்ஷேத்திரத்திலுள்ள பொன்னம்பலத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இம்மாதிரி உனக்குள் தாண்டவம் புரியும் ஆண்டவனைத் தரிசி என்பது அதன் குறிப்பு. திரைவிட்டிருந்தால் பொன்னம்பலத்தில் நடம்புரியும் நடராஜனைக் காணமுடியாது. திரையை நீக்கியே தரிசித்தல் வேண்டும். அதுபோன்றே நம்முள் நடம்புரியும் நாதனையும் ஒரு திரை மறைத்திருப்பதால்தான் நமக்கு அவரைத் தரிசிக்க இயலவில்லை. அத்திரையே அஞ்ஞானம், அல்லது அவித்தை, அல்லது மாயை என்ற திரை.

"மாயையெனுந் திரையை நீக்கி நின்னை யாரறியவல்லார்—நினைப் போர் நெஞ்சம் மன்றாக இன்பக் கூத்தாடவல்ல மணியே..." என்றனர் தாயுமானவரே மற்றோரிடத்தில்.

4. உள்ளத்தையும் இங்கு எனையும் நின்கையினில் ஒப்புவித்தும்=உடல் பொருள் ஆவி மூன்றினையும் உனக்கு அர்ப்பணம் செய்துவிட்ட பின்பும்

உடல்பொருள் ஆவி மூன்றையும் ஈசுவரனுக்கு ஒப்பித்துவிட்டு தனக்கென ஒரு சுதந்திரமும் வைத்துக்கொள்ளாது எல்லாம் ஈசுவரன் செயலாகக் கொண்டபின் வினையேறக் காரணமில்லை யாதலின் அவ்வாறு கூறினார்.

"கணக்குமுண்டோ" என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப் பொருளது—கணக்கு இல்லை என்றபடி.

பள்ளத்தில் வீழும் புனல்போல் படிந்து=ஓடிக்கொண்டேயிருந்து பள்ளத்தில் வீழ்ந்த ஜலம் பிறகு ஓடாமல் அப்பள்ளத்திலேயே படிந்து கிடப்பதுபோல், மனப்பதைப்பற்று

உன் பரமவின்ப வெள்ளத்தில் மூழ்கினர்க்கே=உன்னிடம் வைத்த அன்பின் பெருக்காலாகிய ஆனந்தத்தில் மூழ்கினவர்களுக்கு மட்டுமே

எளிதாம் தில்லை வித்தகனே=சுலபத்தில் கிட்டும் பொன்னம்பலத்தில் அமர்ந்த ஞான சொரூபியே.

---

# ஆனந்தபோதினி

இரக்தாட்சி௵ ஐப்பசி௴ ௧௳

## தொழில்.

தொழில் என்றால் பொதுவாய் வேலையென்று பொருள். உலகில் மானிடர்கள் சாதாரணமாய்ச் சீவியத்தின் பொருட்டே ஒரு வேலையைச் செய்வதால் தொழில் அல்லது வேலை யென்றால் உத்தியோகம் என்றும் பொருள்படுகிறது. இம்மண்ணுலகில் வேலை செய்யாதவர்கள் ஒருவருமில்லை யெனலாம். எறும்பு முதல் யானை யீறாகவுள்ள சகல சீவராசிகளும் வேலை செய்து கொண்டுதான் இருக்கின்றன. வயிறே இதற்குக் காரணமாக விருக்கிறதெனலாம். ஒன்றையும் வேண்டாத பரமேசுவரர்கூட

சதா பஞ்ச கிருத்தியங்களாகிய தொழிலை நடத்திக்கொண்டேதா னிருக்கிறார். சதா ஒரு வேலையைச் செய்துகொண்டேயிருப்பது மானிடர்க்கு இயற்கையாகவே யிருக்கிறது. ஆகையால் வேலை செய்யாதவன் ஒருவனுமேயில்லை. "சும்மா இருக்கிறான்" என்று கருதப்படுகிறவன்கூட உண்மையில் சும்மா இருக்கவில்லை. அவன் தேகம் வேலை செய்யாதிருந்தாலும் அவனுடைய மனமாவது, வாக்காவது, இரண்டும் சேர்ந்தாவது வேலை செய்துகொண்டுதா னிருக்கும். ஏனெனில் நாம் மனம் வாக்கு காயம் என்ற மூன்று லும் தொழில் செய்கிறோம். மூன்றும் வேலை செய்யாமல் உண் மையாகவே சும்மாவிருப்பவன் ஞானி ஒருவனே. அவன்மட் டுமே தொழிலற்றவன். மற்றையரெல்லாம் ஏதேனுமொன்றைச் செய்துகொண் டிருப்பவர்களே.

தேகம் உற்பத்தியாகி பூமியிற் சனித்ததுமுதல் சவமாய்க் கீழே விழுமட்டும் வயிற்றிலுள்ள பெருந் தீயாகிய ஜடாராக்கி னிக்கு 5 அல்லது 6 மணி நேரத்திற் கொருமுறையேனும் உண வுப்பொருள்களாகிய எரிகரும்பை எறிந்துகொண்டே யிருக்க வேண்டும். இந்த வயிறோ மகாகொடியது. ஒருவேளை உணவை யளிக்காவிடின் வதைத்துவிடும். அதிகமாய்க் கிடைத்தபோது இரண்டு வேளை யுணவையேனும் மொத்தமாய் ஏற்றுக்கொள் என்று வேண்டினாலும் ஒப்புவதேயில்லை. இதென்ன அடாவடித் தனம்! இந்த வயிற்றிற் கிரைதேடுவதற்காகவே மனிதர், மிருகம், பக்ஷி, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய சகல சீவராசிகளும் தொ ழில் செய்துகொண் டிருக்கின்றன. மிருகங்கள், பக்ஷிகள், ஊர் வன நீர்வாழ்வன இவைகளுக்கு இரைதேடுவதே நாள் முழுதும் தொழிலாக விருக்கிறது. பகல் முழுதும் தொழில் செய்த ஆயா சத்தைத் தீர்த்துக்கொள்ளச் சகல ஜீவராசிகளும் இரவில் தூங்கு கின்றனர். இந்த உண்ணல் உறங்கலாகிய இரண்டு காரியங்களை யும் எல்லா ஜீவராசிகளும் செய்தே தீரவேண்டும். கடைசியில் அநித்தியமாகிய இந்த உலகவாழ்க்கையில் நாம்செய்யும் தொழில் கள் இந்த இரண்டாகவே முடிகின்றன.

இதனாலன்றோ ஆன்றோர் உலகில் கடைசியில் நாம் செய்யும் தொழில் முழுமையும் கூடி "உண்ணுவதும் உறங்குவது மாகமுடி யும்" என்று கூறியருளினர்.

மனிதன் மட்டும் தன் ஜீவனத்திற்காகப் பலவகையான

தொழில்களைச் செய்கிறான். இத்தொழில்களை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. சுயாதீனத்தொழில், 2. அடிமைத் தொழில்.

1. சுயாதீனத் தொழில். தனது சொந்தத்தொழில். இன்னொருவருக்குக் கட்டுப்பட்டு அஞ்சிச் செய்வதல்ல.

2. அடிமைத் தொழில் என்பது இன்னொருவருடைய தொழிலைக் கூலிக்குச் செய்வது. சுயாதீனத் தொழில்கள் என்பவை- விவசாயம், வர்த்தகம், கைத்தொழில்கள் இவைகளாம். இன்னொருவரிடம் சம்பளம்பெற்று அவர்களுடைய வேலையைச் செய்வதாகிய தொழில்களெல்லாம் அடிமைத் தொழில்களே.

சுயாதீனத் தொழில் செய்யும் ஒருவன் அத்தொழிலால் உண்டாகும் இலாபம் முழுமையும் தானே அடைகிறான். அதனால் அவன் தொழிலை உற்சாகத்தோடும் ஊக்கத்தோடும் செய்து அதை நாளுக்குநாள் விர்த்திசெய்துக் கொள்வான். அவன் ஒருவர்க்கு அஞ்சித் தொழில் செய்யவேண்டியதில்லை. அவனுக்கு உள்ளத்தில் மகிழ்ச்சியும், சுயமதிப்பும், கௌரவமும் உண்டாகின்றன. அவன் தன் சௌகரியப்படி வேலைசெய்யலாம். நினைத்த போது தன் வேலையை நிறுத்திவிட்டுத் தனக்கு அவசியமான வேறொரு காரியத்தைக் கவனிக்கலாம். அதற்காக இன்னொருவர் அனுமதிக்கு அவன் எதிர்பார்த் திருக்கவேண்டியதில்லை.

இன்னொருவரிடம் சேவகாவிர்த்தி செய்பவன் அடிமைத் தொழிலே செய்கிறான். "அதமம் சேவகா விர்த்தி" என்று முன்னோர் கூறியிருக்கின்றனர். அவனிடம் வேலைவாங்கிக்கொண்டு அவனுக்குச் சம்பளம் கொடுக்கும் எஜமான் ஆண்டான் நிலைமையிலும், சம்பளம்பெற்று வேலைசெய்யும் அவன் அடிமை நிலைமையிலும் இருக்கிறார்கள். அவன் புத்திபலத்தாலோ தேகபலத்தாலோ செய்யும் தொழிலுக்குக் கால அளவின்படி குறித்த ஒரு தொகையைப் பெறுகிறான். அதனாலுண்டாகும் மற்றபலன் முழுமையும் எஜமான் அடைகிறான். அடிமைத்தொழில் செய்வோன் தனக்குமேல் ஒரு அதிகாரியிருக்கிறான் என்று அச்சத்தோடு வேலைசெய்கிறான். அவன் கட்டுப்பட்டவன். அடிக்கடி இன்னொருவர் அனுமதிக்கும் கட்டளைக்கும் எதிர்பார்த் திருக்க வேண்டியவன். தொழிலில் தெரிந்தோ தெரியாமலோ தவறுசெய்யின் தண்டனைக்கும் கண்டனைக்கும் ஆளாவான்.

சுயாதீனமான தொழில் செய்வோனுக்குக் கௌரவமும் மதிப்பு முண்டு. அடிமைத்தொழில் செய்வோனுக்கு அவை கிடையா-அவனுக்குத் தன்மதிப்பேயில்லை. ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் குடும்ப சவரட்சணைக்காகத் தாங்களே சுயாதீனத் தொழில்களைச் செய்து தங்களுடைய உலகவாழ்க்கைக்கு வேண்டியவற்றைத் தாங்களே உற்பத்தி செய்துகொண்டால், அக்குடும்பம் வரையில் ஒருவர் தயவுக்கேனும் ஆதரணைக்கேனும் எதிர்பாராத கௌரவமுடைய குடும்பமாகும். அக்குடும்பத்திற்குக் கௌரவமும் தன்மதிப்புமுண்டு. இவ்வாறே ஒரு தேசத்திலுள்ள குடும்பங்களில் பெரும்பாலானவை அக்குடும்பத்தைப்போல் நடந்து கொண்டால் அத்தேசம் கௌரவமும் மதிப்பு முடையதாகும்.

உலகில் முன்னேற்ற மடைந்து செல்வமும் பலமும் பொருந்தியுள்ள தேசங்களனைத்தும் சுயாதீனத்தொழில் செய்வதிலேயே பிரிய முடையவைகளாக விருக்கக் காணலாம். அதாவது அத்தேசத்தவர்களில் பெரும்பாலோர் சுயாதீனத் தொழிலையே விரும்புகிறவர்களாகவும் அடிமைத்தொழிலை வெறுப்பவர்களாகவும் இருக்கக் காணலாம். திருட்டாந்தமாய் இங்கிலாந்தி லுள்ளோர், பெரிய பிரபுக்களாக விருப்போர் கூட, விவசாயம் வர்த்தகம் கைத்தொழில் இவற்றையே மதிப்பார்கள். இராணுவத் தொழில் நமது பெண்டு பிள்ளைகளையும் பொருள்களையும், அப்படியே நம்தாய்நாட்டின் சுயாதீனத்தையும் பாதுகாக்கும் தொழிலானதால் அதைமட்டும் கௌரவத் தொழிலாக மதிக்கிறார்கள்.

இனி நம் நாட்டார் இவற்றில் எவ்வகுப்பைச் சேர்த்தவர்களாக விருக்கிறார்க ளென்று பார்ப்போமாயின் ஒவ்வொருவர் முகத்திலும "அடிமைத் தொழில்" என்றபதம் வரையப்பட்டிருக்கிற தென்று கூறலாகும். ஏனெனில் அகத்திலக்ஷணம் முகத்தில் என்பதுபோல் நம் நாட்டாரில் பெரும்பாலோர் மனதில் அடிமைத்தொழிலின் நாட்டமே யதிகமாயிருக்கிறது. கால்கேட்டினால் விவசாயம, வர்த்தகம், கைத்தொழில் முதலிய சுயாதீனத் தொழில்களை இழிவான அகௌரவத் தொழில்களாகவும், சேவகா விர்த்தியாகிய அடிமைத் தொழிலைக் கௌரவமான தொழிலாகவும் மதிக்கத் தலைப்பட்டார்கள். இந்த மதிமயக்கால் நம் தாய் நாட்டிற்கே பெரிய அனர்த்தம் விளைந்தது. எவ்வாறெனின்;—

1-வது—அடிமைத் தொழிலைக் கௌரவமாகக் கருதியதால் அதற்கு இக்காலத்தில் அவசியமான அன்னிய பாஷைக் கல்வியையே முக்கியமாய்க் கற்கத்தொடங்கி தாய்ப்பாஷைக் கல்வியை யலட்சியம் செய்யத் தொடங்கி விட்டார்கள்.

2-வது—தாய்ப்பாஷைக் கல்வியை யலட்சியம் செய்ததால் நமது முன்னோருடைய ஆசார ஒழுக்கங்களின் சிறப்பையும், நமது பூர்வீக நாகரீகத்தின் மேன்மையையும், நமது மதத்தின் அநாதி நித்தியத் தன்மையையும் உணர வழியில்லாது போயிற்று. அன்னிய பாஷையின் பழக்கத்தால் அந்த அன்னிய ஆசார ஒழுக்கங்களையே மேலானவை யெனமதித்து அவற்றையே கைப்பற்றத் தொடங்கி விட்டார்கள். இதனால் ஆசாரஈனர்களாய் சுயமதிப்பை யிழக்க நேர்ந்தது.

3-வது—அன்னிய பாஷைகற்று அடிமைத் தொழிலையே கௌரவத் தொழிலாய் மதித்தவர்கள் சுயாதீனத் தொழில்களை யவமதித்ததால் விவசாயம் வர்த்தகம் கைத்தொழில் இவைவிர்த்தியாகாமல் குன்றிப்போயின.

4-வது—நமது வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களைக்கூட நாமே உற்பத்தி செய்துகொள்ளாததால், உணவுப் பொருள்களுக்கும், உடுக்க வஸ்திரத்திற்கும், நோய்தீர்க்க ஔஷதத்திற்கும் கூட அன்னிய நாட்டாரிடம் கையேந்தி நிற்கநேரிட்டது.

5-வது—இக்காரணங்களால் ஜனங்கள் பிழைப்புக்குத்தொழிலின்றி திண்டாட நேர்ந்தது. தரித்திரம் மலைபோல் வளர்ந்து கொண்டே போகிறது. பெரும்பாலோர் அரைப்பட்டினி கிடக்கும் காலம் வந்துவிட்டது. இதை விரித்துக் கூறவெனின் பலபக்கங்கள் கொள்ளும், மனத்துடிப்புண்டாகும் என அஞ்சி யிதோடு நிறுத்துகிறோம்.

6-வது—இப்போது கடைசியில் இவர்கள் கௌரவமானதென, வீண்மயக்கால் எண்ணி யிருந்த அடிமைத் தொழிலுக்கும் திண்டாட வேண்டிய காலம் வந்துவிட்டது.

எப்படியெனில் அடிமைத் தொழிலில் ஆசைவைத்து அன்னிய பாஷையையே யதிகமாய்க் கற்கத் தொடங்கிவிட்டார்கள். அதைக்கற்றபின் இதரமான விவசாயம், வர்த்தகம், கைத்தொழில் முதலிய சுயாதீனத்தொழில்களைச் செய்யலாமெனில், அவை அகௌரவமான இழிதொழில்களாகத் தோன்றுகின்றன. அப்

படிச்செய்ய விரும்பினுலும் இவர்களால் முடியாது. ஏனெனில் அவற்றில் ஒரு தொழிலைச் செய்வதற்கு வேண்டிய கல்வியை யிவர்கள் கற்கவில்லை. இவர்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வியோ இகத்திற்கும் உதவாது, பரத்திற்கும் உதவாது. துரைத்தனத்தாரிடம் அல்லது அன்னியநாட்டு வர்த்தக சங்கத்தாரிடம் அடிமைத் தொழில் செய்யமட்டுமே அக்கல்வி பயன்படும்.

அத்தகைய கல்வியை யாவருமே கற்கத்தொடங்கி விட்டார்கள். பிஏ,யம்-ஏ பட்டதாரிகள் அளவுக் கதிகமாய் விட்டார்கள். யாவரும் சேவகாவிர்த்தியையே நாடுகிருர்கள். அதில் எத்தகைய இழிவும் கஷ்டமும் ஆபத்துமான தொழிலாக விருந்தாலும் அதையே கௌரவமான தொழிலாக எண்ணுகிருர்கள். தாழ்ந்த பரீட்சையாகிய S. S. L. C. யில் தேரிய ஒருவனுக்கு அளிக்கக் கூடிய வேலைக்கு பிஏ, யம்-ஏ பட்டதாரிகள் கூட அபேக்ஷகராக வருகிருர்கள். ஒருவேலை காலியாக விருக்கிறது என்ற விளம்பரத்தைக் கண்டால் இருநூறுபேர் முன்னூறுபேர் அதற்கு தர்க்காஸ்து அனுப்புகிருர்கள். இவர்கள் இம்மாதிரிபோப் மேல் விழுவதால் அதிகாரிகள் உயர்ந்த படிப்பாளியைப் பொருக்குவதோடு இன்னும் ஆடுமாடுகளைப் பொருக்குவதுபோல் தேகபலம் முதலிய பலவிஷயங்களில் சிறந்த ஒரு ஆளைப் பொருக்கி யெடுத்துக்கொண்டு மற்றபேரைத் தலை நாணத்தோடு திரும்பிச் செல்லச் செய்கிருர்கள். அந்தோ இதனுல் பணத்தைச் செலவழித்துப் படித்து விட்டுக் கடைசியில் வேலை யகப்படாமல் திண்டாடுகிறவர்களின் தொகை யதிகமாகிக் கொண்டே போகிறது. இது மிக்க துக்ககரமானவிஷயம்.

நமது அறியாமையாலும், வீண்மயக்காலும், நம்முன்னேர் நாகரீகம் ஆசாரம் முதலியவற்றை யிழிவுசெய்ததாலும், அன்னிய நாகரீக ஆசாரங்களில் தகாதனவற்றை யெல்லாம் அனுசரிக்கத் தொடங்கியதாலுமே நாம் இத்தகைய நிலைமைக்கு வந்துவிட்டோம். இது நம்குற்றமேயன்றி வேறில்லை. இனியேனும் நம்மக்களுக்குத் தகுதியான கல்வியைப் புகட்டி, அவர்களுக்கு அடிமைத் தொழிலில் இப்போதிருக்கும் ஆசையை யொழித்து, அவர்களுக்குச் சுயாதீனத் தொழில்களின் பெருமையும் நன்மையும் நன்கு விளங்கச்செய்தால்தான் நம் தாய்நாடு க்ஷேமமடையும். பெற்

ரோர்களும் உபாத்திமார்களும் இவ்விஷயத்தில் சிரத்தை யெடுத்துக்கொள்ளவேண்டும். கருணாநிதியாகிய பரம்பொருள் நம் பாரத மாதாவின் விஷயத்தில் நல்லருள் புரியவேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக. ஓம் தத் ஸத்.

---

## நவீன நாகரீகத் தீங்கு.

ஆங்கிலம் படித்தவர்களில் பெரும்பாலர் எல்லா விஷயங்களிலும் ஆண் பெண் இருபாலரும் மேல் நாட்டார் ஒழுக்க ஆசாரப்படி நடக்க வேண்டுமென்கின்றனர். அதற்கு ஆதாரமாக "புதியன புகுதலும் பழையன கழிதலும் வழுவல கால வகையினானே" என்றதைக் கூறுகிறார்கள். ஆங்கிலத்தில் பி. ஏ., பட்டம்பெற்ற ஒரு முதலியார் (பெயரைப்பற்றி நமக்கு அவசியமில்லை) ஒரு வியாசத்தில் இதே ஆதாரத்தைக்காட்டி பின்வருமாறு வரைகிறார்:—

"நாகரீகம் அதிகரிக்க அதற்கு ஏற்றவாறு நாம் நடந்து கொள்ளுதல் முன்னோரால் ஏற்படுத்தப்பட்ட நீதிகளுக்கு விரோதமாயிருப்பினும் குற்றமாகாது. மங்கைப் பருவமடைந்த மங்கையர்கள் வீட்டை விட்டுச் செல்லலாகாது என்று கூறியிருப்பினும், தற்கால சிறுமிகள் பாடசாலைக்குச் செல்கின்றனர். மற்றும் சிலர் ஆடவர்களுக்குரிய சுதந்தரங்கள் தமக்கும் உண்டென்று போர் செய்து அவைகளை யடைந்து அவர்களோடு ஒத்து உழைக்கின்றனர். இது நம் தமிழ் மக்கள் வழக்க ஒழுக்கங்களுக்கு, மாறுப்பட்டிருப்பினும் குற்றமாகுமா? (ஆகாது என்பது பொருள்.) இது போலவே ஆண் மக்களிலும் அனேக மாறுபாடுகள் ஏற்பட்டிருக்கின்றன. அவர்கள் தலைகளில் முன் மயிர் வைத்துக்கொள்வதும், மேனாட்டு மக்கள் போல் உடைகள் உடுத்துவதும், இன்னும் பல செய்கைகளும் (இவை அரை மீசை கால் மீசை வைப்பதும், சாராயங் குடிப்பதும், சுருட்டு பிடிப்பதும், மாதரோடு கை கோர்த்துக்கொண்டு திரிவதும் ஆகியவர்களைக் குறிக்கிறதாக்கும்) நம் ஒழுக்கத்திற்கு மாறுபட்டிருப்பினும் குற்றம் என்று கூறமுடியாது * * *"

நமது முதலியாரவர்கள் உயர்தர ஆங்கிலக் கல்விகற்றதன் பயன் இது போலும். "புதியன புகுதலும் பழையன கழிதலும் வழுவல கால வகையினானே" என்று கூறப்பட்டதாலேயே நாம் நமது முன்னோர் ஆசார ஒழுக்கங்களையெல்லாம் அலட்சியம்செய்துவிட்டுத் தகாத மேல் நாட்டு ஆசாரங்களைக் கண்மூடித்தனமாய் கைக்கொள்வதா? ஒளவையார் "தையல் சொற்கேளேல்" என்று கூறியதால், மனைவி "சாப்பிட வாருங்கள்" என்றால் கணவன் சாப்பிடாமல் பட்டினியாகவே யிருக்கவேண்டுமென்பதா? இது நாகரீகம் என்கிறார் நமது நண்பர். ஆகையால் நாம் சுத்த அநாகரீகர்களாகவும் மூடர்களாகவும் இருந்து இப்போதுதான் மேல்

நாட்டாரிடம் நாகரீகம் கற்றுக்கொள்கிறோம் என்று கருதுவோரில் நமது நண்பரும் ஒருவர் என்று கருதுகிறோம். நமது முன் நிலைமை யெவ்வாறிருந்தது, நமது நாகரீகம் எத்தகைய நிலையிலிருந்தது, எவ்வளவு புராதனமானது என்பதை அறிந்திருந்தால் இவ்வாறு இவர் வரைந்திருக்க மாட்டார். ஒவ்வொரு நாட்டாரின் உடை, ஆசாரம் முதலியவை அந்தந்த நாட்டின் சீதோஷ்ண நிலைமையையும் வசதிகளையும் பொருத்தவை. மேல் நாட்டாரின் உடை நமக்கு ஒவ்வாதென்பதும் நமது ஆசாரத்திற்குத் தகாதென்பதும் ஒரு பக்கமிருக்க, நமது வருவாய்க்கே யது பொருந்தாது என்பது வெளிப்படை. தங்கள் தேசாசார ஒழுக்கத்தைக் கைவிடுவோர் எங்கேனும் ஒரு ஜாதியாராக மதிக்கப்படுவார்களோ? மேல் நாட்டார் எந்தத் தேசம் சென்று எவ்வளவு காலம் அங்கு தங்கியிருப்பினும் தங்கள் தேசாசாரத்தைக் கைவிடுகிறார்களா?

மேல் நாட்டு ஆசார ஒழுக்கங்கள் நம் ஆடவர்க்கே பல தீங்குகளை விளைவிக்கின்றனவென்பது பன்முறை அறிவாளிகளாகிய ஆன்றோரால் நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கப் பெண்மக்கள் இவர் கூறுகிற வழிகளில் நடந்தால் அவர்கள் நிலைமை யென்னாகும்? கொஞ்சகாலத்திற்குள் பெண்களுக்குரிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற நாற்குணங்களும் அறவே யொழிந்து 'கற்பு' என்ற வார்த்தையே கனவாய் மறைந்துபோம். நமது பெண்மக்கள் கற்பரசிகளாய் இருந்து தெய்வவருள் பெறவேண்டுமென்றும், அனுதிகால முதல் நம்நாட்டு மாதர்க்கிருக்கும் கற்பினாலுண்டாகும் பெருங்கீர்த்தி மங்கலாகாதென்றும் கருதுவோர் மேல் நாட்டு ஆசாரப் பேயினிடம் அவர்கள் சிக்கவொட்டாது பாதுகாக்க வேண்டும். மங்கைப் பருவம் வந்த பெண்கள் சாதாரணமாய் அன்னிய ஆடவரோடு புழங்குவதால் எத்தகைய தீங்குகள் நேரிடுமென்பது சாதாரண புத்தியுடையோர்க்கே சற்று சிந்தித்தால் நன்கு விளங்கி அவர்களைத் திடுக்கிட செய்யும். மேல் நாட்டு ஆசார சம்பந்தமான கதைகளை வாசிப்போர் இந்த உண்மையை யறிந்தேயிருப்பார்கள். மங்கையர் கல்வி (நமக்கு அவசியமான கல்வி வரையில்) கற்பதைப்பற்றி நாம் கூறவில்லை. ஆனால் அவர்கள் வீட்டைவிட்டு வெளிப்பட்டு பாடசாலைக்குச் செல்வது தகாத நடக்கையே. அதிலும் ஆடவராகிய உபாத்திமார்கள் இருக்கும் பாடசாலைக்குச் செல்வதாவது, அன்னிய மத உபாத்தினிகளிடம் கல்வி கற்பதாவது மிகுதியும் தகாததேயாகும். இவற்றால் பெருங் கெடுதிகள் விளைவது பிரத்தியட்ச அனுபவமாக விருக்க, நமது முதலியார் நம்மவர்க்கு இத்தகைய போதனை செய்வதைப்பற்றி நாம் மிக்க விசனிக்கிறோம். மேல் நாட்டு நாகரீகத்தில் இவருக்குண்டாகிய மயக்கமே யிதற்குக் காரணம்.

மேல் நாட்டு மாதரின் நிலைமைக்கும் நம் நாட்டு மாதரின் நிலைமைக்கும் மிக்க வித்தியாசமுண்டு. ஆதியில் அவர்கள் ஆண் பெண் இருபாலரும் வித்தியாசமின்றி யிருந்தவர்கள். அந்த நிலைமையிலிருந்து அவர்கள்

சேர்திருத்த மடைந்தவர்கள். அவர்களில் அனேகர் தாங்களே ஒரு தொழிலைச் செய்து ஜீவிக்க வேண்டியவர்களாக விருக்கிறார்கள். நமது மாதர் எப்போதும் ஆடவரால் ஆதரிக்கப்படுபவர்கள். அப்படி யாரேனும் அனுதரவான நிலைமையை யடைந்துவிட்டால் அப்போதும் வீட்டிற்குள்ளிருந்தபடியே, நூல் நூற்றல், சிறு தின்பண்டங்கள் செய்தல் முதலிய ஏதேனுமொரு தொழில் செய்து ஜீவிப்பார்களே யன்றி வெளியில் சென்று அன்னிய ஆடவரின் அதிகாரத்திற்குட்பட்டு வேலை செய்யமாட்டார்கள்.

மேல் நாட்டாருக்கு இல்லற தருமம் என்ற ஒன்றில்லை. நமக்கோ இல்லற தருமம் மிக முக்கியமான அறம். அதற்கு மனைவி அவசியம். இல்லறத்தைச் சரிவர நடத்துவதிலேயே ஒரு ஸ்திரீக்கு எவ்வளவோ வேலைகளிருக்கின்றன. அதற்கு அவசியமான கல்வியைக்கற்று இல்லறத்தைச் சரிவர நடத்தி கற்பரசியாக விருந்தால் அவள் இருமைப் பயனையும் அவசியம் அடைவாள்.

வாலிப காலத்தில் உலக அனுபவம் தெரியாது. மனப்போக்கைத் தடுக்கும் வல்லமை கிடையாது. அக்காலத்தில் பெண்கள் தனியே வெளியில் செல்வதால் சுலபத்தில் ஆபத்துகளில் சிக்கிக்கொள்வார்கள். இத்தகைய தீமைகளுக்கு இடந்தராமல் நம் பெண் மக்களைக் காப்பாற்றவும், மறுமையில் அவர்கள் தெய்வீகப் பதவியடையவும் கருதியே அத்தகைய ஆசார ஒழுக்கங்களை மகான்களாகிய நம் முன்னோர் ஏற்படுத்தியுள்ளார்கள். நமக்குத் தீமைவிளைக்காத சிற்சில விஷயங்களில் காலத்தை யனுசரித்து நாம் மாறுதலடையவேண்டியது அவசியமாயினும் மேற்கண்டபடி நாம் நமது முன்னோரது மத சம்பந்தமான பூர்வீக ஆசார ஒழுக்கங்களை யலட்சியம் செய்தொழித்துவிட்டு மேல்நாட்டு அன்னிய ஆசாரங்களைக் கைக்கொள்வது பெருங்கேட்டை விளைவிக்கும் என்பதே ஆன்றோர்களின் அபிப்பிராயம். நாம் மனப்பூர்வமாக அதை நம்புவதாலேயே நமது நண்பர் கூறிய போதனையை மறுத்து வரைய நேர்ந்தது. இனி இதை வாசிப்போர் சிந்தித்து, ஐயமுளதேல் ஆன்றோரைக்கேட்டு அவர்கள் புத்தி கூறுமாறு நடந்துகொள்ளும்படி விட்டுவிடுகிறோம்.

ஓம்தத்சத். பத்திரிகாசிரியர்.

---

## ஹிந்து மத சித்தாந்தங்கள்.

கீழ்க் கூறப்படும் விஷயங்கள் ஸ்ரீமான் பாபு கோவிந்ததாஸ் என்பவரால் வரையப்பட்ட "ஹிந்து மதம்" என்ற நூலைப்பற்றி கனம் பொருந்திய பிரம்மம் ஸ்ரீ ஸா. சதாசிவய்யரவர்கள் (சென்னை ஹைகோர்ட் ஜட்ஜாக விருந்தவர்) மேலே கண்ட தலை யங்கமிட்டு "இந்தியன்ரிவியு" என்ற சஞ்சிகையில் வரைந்துள்ளவற்றின் மொழி பெயர்ப்பு:—

"உபநயனம், கலியாணம் என்ற இரண்டு ஸமஸ்காரங்கள் மட்டுமே இக்காலங்களில் நிலையாக அனுசரிக்கப்பட வேண்டியவை. பிறவி வித்தி

யாசம் ஜாதி வித்தியாசமின்றி எல்லா இந்துக்களுக்கும் உபநயன ஸம்ஸ்காரம் அளிக்கப்பட வேண்டும். இக் காலத்தில் வழக்கத்திலில்லாததும் கெட்டதுமான நியோக ஸமஸ்காரம் போன்றதையும், பலதார மணத்தையும் மறுபடி வழக்கத்திற்குக் கொண்டுவர முயலலாகாது. வைதீக கர்மங்களையும் சடங்குகளையும் சுருக்கிவிட வேண்டும். அர்த்தமற்ற மந்திர உச்சாடனங்களைக் கைவிட வேண்டும். சவங்களைத் தகனம் செய்யும் வழக்கத்தையே யாவரும் அனுசரிக்கவேண்டும். சுகாதார விதிகளை யனுசரித்த மட்டிலேயே பிறப்பு இறப்புக்குரிய சடங்குகளைச் செய்யவேண்டும். சூதக (தீட்டு) கால அளவைக் குறைத்து விடவேண்டும். அசுத்தம், சுகாதாரக் குறைவு இக்காரணங்களால் தவிர, தீண்டாமை நிறுத்தப்படவேண்டும். சமீபத்தில் வரலாகாதென்ற விதி எந்தச் சாத்திரங்களிலும் கூறப்படாத விபரீத வழக்கம். இது அடியோ டழிக்கப்பட வேண்டும். சாதாரண புத்தியை யனுசரிக்கவேண்டும். ஆண் பெண்களுக்குரிய உரிமைகளிலும், சுதந்தரத்திலும் பூர்வீக வைதீக காலங்களில் இத்தகைய துவேஷமுண்டாக்கும் எந்த வித்தியாசமும் கற்பிக்கப்படவில்லை. இவை ஒழிக்கப்பட வேண்டும். கொன்று தின்பதையும் மயக்க வஸ்துக்களை யுபயோகிப்பதையும் ஒழிப்பதை உண்மை இந்துக்கள் சட்டமாய் வைத்துக்கொள்ளவேண்டும். ஏனெனில் உண்மையான இந்து மதத்தின் அழியாத அஸ்திவாரம் அஹிம்ஸையே. ஊர் ஊராகச்சென்று இயற்கை யழகுகளையும், கம்பீரமான கோயில்களின் வனப்பு முதலியவற்றையும், ஆங்காங்குள்ள ஜன சமூகங்களின் ஆசார ஒழுக்க வழக்கங்களையும் பார்த்தறிவது ஓர் கல்வியாதலானும், அத்தகைய யாத்திரைகள் குறுகிய மனதை விசாலிக்கச் செய்து, இதரக் கொள்கைகளைச் சகிக்கொணாத குருட்டு நம்பிக்கையை யொழிப்பதாலும், தாய் நாட்டிலும் அன்னிய நாடுகளிலும் யாத்திரை செய்தல் உற்சாகப் படுத்தப்படவேண்டும்.

தானங்கள் கொடைகள் சத் பாத்திரமுடையவர்களுக்கு மட்டுமே யளிக்கப்படவேண்டும். தகுதியற்ற பிராம்மணர்களுக்கும் வெளி வேடச் சந்நியாசிகளுக்கும் தானங் கொடுக்கும்படி கூறும் கற்பித நூல்கள் நிராகரிக்கப்படவேண்டும். பிதுர்க்களுக்குச் செய்யப்படும் சிரார்த்தத்தைப் பன்முறைகளில் வைத்துக்கொள்ளலாகாது. குறித்த ஒரு பருவகாலத்தில் எல்லா பிதுர்க்களுக்கும், அன்போடு அதைச் செய்யவேண்டும். கலியாணங்கள் ஆடவர்க்கு இருபது வயதானபிறகும், பெண்களுக்குப் பதினைந்து பதினாறு வயதான பிறகும் மட்டுமே செயயப்படவேண்டும். கோத்திர விதியை யனுசரித்து மணம் நடத்துவது வீண் துன்பத்தை யளிப்பதேயாகும். ஏனெனில் இக்காலத்தில் எந்த உண்மை இந்துவின் மெய்யான கோத்திரமும் நிச்சயமானதல்ல. வதூவரர்களின் வயதுகளிலுள்ள தாரதம்மியம், அதிக நெருக்கமான இரத்தக் கலப்பில்லாமை, இந்த விஷயங்களில் மட்டுமே நியமம் இருக்கவேண்டும். (அதாவது பிள்ளை பெண்ணை

விட 6, 7-வயதேனும் மூத்தவனாக விருக்கவேண்டும். அதிக நெருக்க மான இரத்தக் கலப்புள்ள சம்பந்தமாயிருத்தலாகாது. பிள்ளை பெண்ணை விட அதிக அளவுமீறி மூத்திருக்கலாகாது என்பதாம்.) இப்போதிருப்பது போல் கேவலம் பரம்பரைப் பிறவியையே காரணமாகக்கொண்டு ஏற்படுத் தப்பட்டிருக்கும் ஜாதிப்பிரிவினை கண்டிப்பாய் அடியோடொழிக்கப்பட வேண்டும்.''

## புராதன இந்திய சோப் பவுடர்.

புராதன காலத்தில் பச்சைப்பயறு மாவுபோட்டு உடம்பைத் தேய்த்து அழுக்கைப் போக்கி வந்தார்களென்பது யாவருமறிந்த விஷயம். தற்காலமும் பட்டுத் துணிகளிலுள்ள அழுக்கைப் போக்கப் பச்சைப்பயறைத் தான் அரைத்து ஜலத்தில்கரைத்து, பட்டை அதில் ஊரவைத்துத் துவைத்து அழுக்கைப் போக்கி வருவது வழக்கமாக இருந்து வருகிறது.

என் வீட்டில் ஒருசிறு குழந்தைக்குச் சோப்பினால் தினம் குளிப்பாட்டி வந்தார்கள். குழந்தை உடம்பு நாளுக்குநாள் இளைத்து வருவதாகச் சொல்லி ஸ்திரீகள் பச்சைப்பயறு மாவைக் குழந்தை உடம்பில் தேய்த்து தினம் குளிப்பாட்டிக் கொண்டுவர, 15 தினத்தில், குழந்தை உடம்பு சுகப்பட்டு புஷ்டியடைந்து வந்தது. பிறகு சோப்பை நிறுத்திவிட்டு நாளது வரை அதே மாவை வீட்டிலுள்ளோரனைவரும் இரண்டு வருஷ காலமாகத் தேய்த்துக் குளித்து வருவதில் சிரங்கு சொரி முதலான சர்ம வியாதிகள் ஒருவருக்கும் காணோம்.

இதன் அனுகூலம் நமது நாட்டு ஸ்திரீகளுக்குத் தெரிந்ததாயும் கலியாண காலங்களில் நலங்கு மாவு செய்து தேய்த்துக் குளிப்பது வழக்கமான சடங்கு ஆசாரமாகவும், நாளது வரையில் நடைபெற்று வருகிறது.

பச்சைப்பயறு நம்மிந்தியாவில் விளைவதாயும், இந்தியருடைய உணவுப் பொருளாயும் சரீர போஷணை உண்டாக்குவதாயும் இருப்பதோடு, தான்யாதிகளில் உப்பு சத்து அதிகமுள்ளதாய் இருக்கிறது. வேறு எவ்வுருப்புகளுக்கும் எவ்விதக் கெடுதலுமுண்டாக்குவதில்லை.

சோப்பு உள்ளுக்கு சாப்பிடத்தக்க ஆகாரவஸ்துவுமல்ல, சரீரவன்மை வளர்ச்சி கொழுமை முதலான எதையும் கொடுக்கக்கூடியதுமல்ல. சோப்புகளுக்கு காஸ்டிக் சோடா மூலசரக்கு. காஸ்டிக் சோடாவைக் கையிலெடுத்தால் சர்மம் வெந்து கர்ப்பூரம் போலக் கரைந்து விடுகிறது. எண்ணெய் அல்லது கொழுப்புடன் இதைச் சேர்த்து சோப்பு செய்யப்படுகிறது. இதற்கு சரீரத்தையாவது சர்மத்தையாவது போஷிக்கக்கூடிய சக்தி கிடையாது. சரீரத்தைப் பசையற்றதாகச் செய்து வரட்சியை உண்டாக்குகின்றது.

சோப்பு போட்டுத் துவைக்கும் துணிகள் பலமற்று சீக்கிரம் கிழிந்து விடுவது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்தான்.

பச்சைப்பயறு நம்மிந்தியரிடத்திலுள்ளது. விலையோ வெகு சரசம். இவ்வளவு நன்மையான வஸ்துவை விட்டுவிட்டு மேல்நாட்டு நாகரீகச் சேற்றில் அழுந்தி அதிகபணம் செலவழித்து சர்மத்திற்கும் சரீரத்திற்கும் கொழுமையில்லாமல் செய்துகொள்வது எவ்வளவு மதியீனம் என்பதை நன்ருய் யோசித்து ஒவ்வொருவரும் பச்சைப்பயறு மாவைத் தேய்த்து அதன் அநுகூலங்களை அனைவருக்கும் தெரிவிக்க வேணுமாய்க் கோருகிறேன்.

வை. செ. தருசாமி பண்டிதர்,
குகை, சேலம்.

குறிப்பு:—சகோதர சகோதரிகளே! சோப்பைப்பற்றி ஆவணிமாதச் சஞ்சிகையில் "நமக்கு சோப் அவசியமா?" என்ற தலையங்கத்தின் கீழ் வரைந்திருக்கிறோம். நம்மவர் இப்போது பூரணமாக மேல்நாட்டு நாகரீக மயக்கில் அமிழ்ந்து கிடக்கிருர்கள். அதனுல் பத்திரிகைகளில் வரைந்துள்ள விஷயங்களை மேல்போக்காய் கதையைப்போல் வாசித்து உடனே அலட்சியமாய் மறந்துவிடுகிருர்களேயன்றி, பத்திரிகைகளில் ஆன்ருேர் கூறியுள்ளபடி நடந்தால்தான் நாமும் நமது சந்ததியாரும் க்ஷேமமுறுவோம், நம் தாய்நாடும் தரித்திரமும் அடிமைத்தனமும் ஒழிந்து முன்னேற்றமடையும் என்பதை யுணர்கிருர்களில்லை. இது மிக்க விசனிக்கத் தக்க காரியம்.

சோப்பு குளிர்நாடுகளாகிய மேல்நாடுகளுக்கே பயன்படும். உஷ்ண பூமியாகிய இங்கு பிறந்த நமக்கு அது ஒருபோதும் ஒவ்வாது. பச்சைப் பயறு, கிச்சிலிக்கிழங்கு, கார்போக அரிசி, கொஞ்சம் நீர்முள்ளி விதை, வேற்றிவேர் முதலிய குளிர்ச்சி யுடையனவும் மணம்பொருந்தியவையுமாகிய வஸ்துக்களை உலர்த்தி யிடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு ஸ்நாநம் செய்யும்போது தேகத்தில் தேய்த்துக் குளித்தால் அழுக்கைப் போக்கி மிக்க ஆரோக்கியத்தை யளிப்பதோடு சர்மவியாதிகளைச் சேரவொட்டாது தடுத்து தேகத்தின் அழலைப் போக்கி சுகத்தையும் வசீகரத்தையும் அளிக்கும். கனிந்த பலாப்பழமிருக்க அதை விட்டுவிட்டு வேப்பங் கனியை விரும்பும் காக்கையைப்போல் நம்மவர் நடந்துகொள்வது பரிதாபம்! பரிதாபம்!!

பத்திரிகாசிரியர்.

---

## நாலடியார் வசனம்

(113-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 8 - ம் அதிகாரம், பொறையுடைமை.

மாலைபோலப் பொருந்திய நீரருவிகளையுடைய குளிர்ந்த மலைகளையும் நாட்டையுமுடைய பாண்டியனே! அறிவில்லாதவனிடம் யாதொன்றையும் சொல்லாதே. அப்படிச் சொன்னுல் அம்மூடனுனவன் அதைத்

திரித்துக் கூறுவான். (அதனால் துன்பமுண்டாகும்.) ஆதலால் கூடிய வரையிலும் (அவனைவிட்டுத்) தப்பி நீங்கிவிடுவதே நல்லது. (1)

சமானமில்லாதவர்கள் குணமற்ற சொற்களைக் கூறினால் அவற்றைப் பொறுத்துக்கொள்ளுதல் தகுதியாகும். அப்படிப் பொறுக்காவிட்டால் மிகுந்த நீரையுடைய கடல்சூழ்ந்த உலகத்திலுள்ள பெரியோர் அதைப் புகழ்ச்சியாகக்கொள்ளாமல் இழிவாகக் கருதுவார்கள். (பொறுப்பதையே புகழ்வார்கள் என்றபடி.) (2)

மலர்கள்தோறும் அழகிய வண்டுகள் சப்தித்துக்கொண்டிருக்கும்படியான மிகக் குளிர்ந்த கடற்கரைச் சோலையையுடைய பாண்டியனே! நமக்காகவேண்டிய நன்மைகளை அறிந்தவர்களைப் பெற்றிருந்தால் (நம் க்ஷேமத்தில் கருத்துடையவர்களாகிய) அப்படிப்பட்டவர்கள் சொல்லும்படியான கடுமையான சொல்லானது அன்னியர் (முக) மகிழ்ச்சி யுண்டாகக்கூறும் (காதுக்கு) இனிய சொல்லைவிட குற்றமுடையதாகுமோ? ஆகாது. (அன்புள்ளார் கடுஞ்சொல்லே இனியது என்றபடி.) (3)

அறியவேண்டியதை யறிந்து அடங்கி, பயன்படவேண்டியதற்குப் பயந்து, செய்யவேண்டியதை உலகத்தார் மகிழும்படி செய்து, அதனாலுண்டாகும் பலனால் இன்பமடைந்து வாழும் குணமுடையவர்கள் எக்காலத்திலும் துன்பமடைந்து வாழமாட்டார்கள். (இன்பத்துடன் வாழ்வார் என்றபடி.) (4)

இரண்டு நண்பர் (ஒருவரோடொருவர்) ஒற்றுமையுடன் கலந்து சிநேகிக்குங்காலத்தில் (அவர்களில்) ஒருவனிடம் நல்லொழுக்கமில்லாதிருந்தால் (மற்றவன்) பொறுக்கக்கூடியவரையில் பொறுக்கவேண்டும். பொறுக்கமுடியாவிட்டால் (அவன் நடக்கையை யாவரு மறியும்படி) தூற்றாமல் அவன் நட்பை விட்டுவிடல்வேண்டும். (5)

(தன் சிநேகிதனொருவன் தனக்குத்) துன்பங்களைச் செய்தாலும் (அவற்றை) நன்மையாகவே நினைத்து, 'ஒழிந்துபோகட்டும்' என்று கோபம் நீங்கி (அப்படிப்பட்டவனோடு சிநேகித்ததற்காகத்) தன்னைத்தானே நொந்துகொள்வதேயல்லாமல், மிகவும் நெருங்கிச் சிநேகித்தவர்களைக் கைவிடுதல் அருமையாம். ஏனெனில் மிருகங்களுக்கும் (நேசித்தபின்) நீங்குதல் அருமையாகும். (6)

'ஓல்'லெனும் சப்தத்துடன் பாயும் அருவிகளுள்ள உயர்ந்த மலைகள் பொருந்திய நல்ல நாட்டையுடைய பாண்டியனே! தாங்கள் செய்த சகித்தற்கரிய குற்றத்தையும் பொறுப்பார்களென்றல்லவோ பெரியோர்களுடைய சிறந்த சிநேகத்தை (ஒருவர் விரும்பி) அடைவது? நன்மைகளைச் செய்பவர்களுக்கு சுற்றத்தார் கிடைக்கமாட்டார்களோ? (இழிந்தோரும் நன்மை செய்வோரிடம் நட்பினராகவிருப்பார்) அதனால் பெரியோருக்குச் சிறப்பு என்ன? (குற்றங்களைப் பொறுத்தலே பெரியோரிலக்கணமாம் என்றபடி)

(வறுமையால்) உடல்வாடி மிகவும் பசி உண்டானகாலத்திலும், (அதனைநீக்கும்) சிநேககுணமில்லாதவனுக்கு அவ்வறுமை தெரியும்படி சொல்லாதே. அப்படி வறுமையை நீக்குந் தன்மையுடையவர்களுக்கும் தம் உயிரை விட்டுவிடும் துணிவில்லாதவர்களே சொல்வார்கள். (மானத்திற்குப் பயந்து உயிர்விடும் துணிபுடையார் அத்தகையோரிடத்தும் தமது வறுமையைக் கூறார் என்றபடி.) (8)

சிறந்த ஆறுபொருந்திய நாட்டையுடைய பாண்டியனே! முதலில் (ஓரிடத்தில்) இன்பம் உண்டாகிப் பின்பு அவ்விடத்திலேயே துன்பம் முதன்மையாக வந்தால் அவ்வின்பம் நீங்கினதேயாகும். அப்படியில்லாமல் அவ்வின்பமே நீங்காமல் உண்டாவதாயினும் தமக்குப் பழிக்கு இடமில்லாத வழியே சிறந்ததாகும். (9)

(ஒருவன்) தான் கெட்டாலும் தன்னைக் கெடுக்கும் பிறர்க்குக் கேடு நினையாமலிருக்கவேண்டும். தன்னுடம்பிலுள்ள தசைமுழுதும் அழிந்து போவதாயினும், உண்ணத்தகாதவர்களுடைய கைப்பொருளை உண்ணாமலிருக்கவேண்டும். ஆகாயத்தால் சூழப்பட்டுள்ள உலகமுழுதும் பெற்றாலும் பொய்பொருந்திய சொற்களைச் சொல்லாதிருக்கவேண்டும். (10)

(தொடரும்) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.



## ஆரிய சித்தாந்தம்.

### (ஞானயோகம்.)

(102-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவ்வுபாயம் வருமாறு:—காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் ஞானத்துக்கு மறுதலையாய் வீடுபேற்றுக்கு இடையூறு செய்வனவாம். வீடடைய விரும்புவோர் அவற்றின் பெயருடன்கூட அவைகளைத் தொலைக்கவேண்டும். பெயரையும் கெடுத்தலென்பது முழுமையும் அழிக்கவேண்டுமென்பது. இவற்றுள் காமம் என்பது பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை யென முத்திறத்தாய் நின்று ஜீவனைப் பந்திக்குமியல்புள்ளது. ஆசையென்பது அவர்கட்கெல்லாம் பொதுப்பெயராயினும் பெண்ணாசையையே மிகுதியாய்க் குறித்துவரும். இது நூல்களின் துணிபாம். பொன்னாசை மண்ணாசை யென்பன இப்பெண்ணாசையைக் காரணமாய்க்கொண்டு பெரும்பாலுந் தோன்றுதலால் பெண்ணாசையையே நூல்களும் பெரியோரும் கூறுவது. பெண்மேற்கொண்ட ஆசை நிமித்தமாக ஒருவன் தன் பெருஞ் செல்வத்தையும், வீடு நிலங்களையும் இழந்துவிடுதல் கண்கூடாதலின் பெண்ணாசையே ஆசைகட்கெல்லாம் பெரிய ஆசையாம். இதுபற்றியே "பெண்ணாசையே எனது பேராசை" என்று ஆன்றோர் அருளிச்செய்தார். பெண்ணுக்கு மகிழ்ச்சியுண்டாக்கும் பொருட்டே வீடுகளும், வயல்களும், ஆடுமாடுகளும் ஈட்டப்படுகின்றன.

இம்மூன்றும் ஓரினமாய் நிற்றலின் ஆசையென்பது மூன்றுக்கும் பொதுவாகவே ஞானிகளால் கொள்ளப்படும்.

மயக்கம் என்பது அநாதியாகவே ஜீவனைப் பந்தித்து நிற்கும் அவித்தையாம். அவித்தை யென்பது ஞானத்துக்கு மறுதலையான அஞ்ஞானம். இது ஆணவம், காமியம், மாயை என மூவகையாய் ஆன்மாவை அநாதியாகவே பந்தித்து நிற்கும் என்று சாஸ்திரங்கள் கூறும். இந்த அவித்தையே எல்லாவற்றுக்கும் மூலமாம். ஆயினும் அதைக் கடைசியில் நிறுத்தியது, காமத்தால் வெகுளியும், அவ்வெகுளியால் செய்வதும் தவிர்வதும் உணரப்பெறாத அறிவின்மையும் வெளிப்படு மியல்புபற்றிக் கூறினார். இந்த அவித்தையே மெய்யைப் பொய்யாகவும், பொய்யை மெய்யாகவும் மாறுபடத் தோற்றுவிப்பது. அதுபற்றியே மெய்யான பரம்பொருளை யுணராமையும், பொய்யான நிலையற்ற பொருள்களினிடத்தில் மதிப்பும் உண்டாய்ப் பிரபஞ்சத்தில் உழல்வதுமாம். வெகுளி என்கிற கோபம், தான் இச்சித்த பொருளை யடைய முடியாதபடி இடையூறு செய்தாரைத் தண்டிக்கும்பொருட்டுத் தோன்றுவதாகிய ஒரு தூர்க்குணமாம். "அவித்தையால் நான் என்கிற அகங்காரமும், அதனால் எனக்கு இது வேண்டுமென்னும் அவாவும், அவாவினால் அப்பொருளை அடையவேண்டுமென்னும் ஆசையும், அவ்வாசை கைகூடாமையால் கோபமும் உண்டாகுமெனவும், ஆதலால் அவித்தை, அகங்காரம், அவா, ஆசை, கோபம் எனக் குற்றம் ஐந்தாமென்றும் வடமொழி நூல் கூறும். அகங்காரம் அவித்தையென்கிற மயக்கத்திலும், அவா ஆசையிலும் அடங்குதலால் குற்றமூன்றென்று தேவர் கூறினார். இதனாற் கூறப்பட்டவுபாயம் யாதெனின், இம்முக்குற்றங்களையும் முற்றும் ஒழிக்கவேண்டும் என்பதாம். கூறிய முறையே ஒன்றொன்றாக ஒழிக்க அவை நீங்கும். அதாவது ஆசையை ஒழித்தலால், கோபம் தோன்றாது கெடும். கோபம் ஒழியவே மயக்கம் தானேயழியும். இவை மூன்றும் ஒழிந்தால் ஜீவனுக்கு விஞ்சி நிற்பது பிராரப்தகர்மமும், அக்கர்மத்தால் வந்த சரீரமுமேயாம். இந்தப் பிராரப்தகர்மமும் சரீரத்துடனே ஒழிவதாதலால், அவற்றால் துன்பமடையாமலிருப்பதற்கு ஞானயோகத்தில் இடையறாது நிலைபெற்று நிற்பதே உபாயமாம். காரணங்களாகிற இந்த முக்குற்றங்களு மொழிந்தால் அவற்றாலாகும் காரியமாகிய இருவினைகளையும் அக்குற்றமொழிந்தார் செய்யாராதலால் கன்மபந்த மெளிதில் நீங்கும்.

கன்மம் ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என மூவகையாகும். இவற்றில் ஆகாமியம் என்பது இச்சென்மத்தில் செய்யும் ஒவ்வொரு கர்மமாகும். சஞ்சிதம் (கூட்டம்) என்பது பிறந்ததுமுதல் செய்த கர்மங்களின் கூட்டம். பிராரப்தம் என்பது முன் சன்மத்தில் செய்த சஞ்சிதமாயிருந்து, இச்சன்மத்தில் நாம் அனுபவித்துக்கொண்டிருப்பது. அப்பிராரப்த கன்மமே தேகமாய் வந்தது. பிராரப்தத்தை யனுபவிக்கும்போது புது புது கர்மத்தை (ஆகாமியத்தை)ச் செய்வதால் மேல்வரும் சன்மத்திற்கு

விதையுண்டாக்கிக்கொள்கிறோம். ஞானயோகப் பயிற்சியினால் சஞ்சித கன்மமும் ஆகாமிய கன்மமும் தகிக்கப்பட்டொழிந்துபோம். பிராரப்தம் சரீரத்துடன் நிலைபெற்று நிற்கும்; சரீரத்தோடொழியும்.

கன்மங்களுக்கு ஆசையே காரணமாதலால் அவ்வாசனா ரூபமாகப் பிராரப்த கன்மங்களுடன் கலந்து நிற்கும். அநாதி தொடங்கி நெடுங்காலப் பயிற்சியாய் வாசனாரூபமாய்ப் பிராரப்த கன்மத்துடன் கலந்து நிற்கும் அவ்வாசை ஓராெனாருகாலத்தில் மேலிடுவதும் சகஜம். அது மேலிடுமாயின் பண்டைய விஷயானுபவங்கள் நினைவுக்கு வரும். அப்போது மனம் புலன்களின் வழியை நாடிச் செல்லும். செல்லுமாயின் பிரமாதம் நேரிடும். ஆதலால் அவ்வாசை மேலிடாதபடி கண்டித்துக்கொண்டே யிருக்க வேண்டும். தன்னைத்தவிர வேறு பதார்த்தங்களுமுளவெனும் கருத்தாலேயே யித்தீங்கு நேரிடுவதால், எல்லாம் பிரமப்பொருளே ; பிரமத்தைத் தவிர வேறு பதார்த்தங்களில்லையென்று நிச்சயித்துத் தீர்மானித்து, அந்தப் பிரமப் பொருளையே பொருள் எனக் கருதிச் சமாதி நிஷ்டைகூடி யிருப்பதே இந்த வாதனை வாராமலொழியும் மார்க்கம். இதுபற்றியே,

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்."

நிலையற்ற பொருள்களை விரும்பி அபிவிருத்தியாகும் இயல்பினையுடைய ஆசையை ஒருவன் ஒழித்தானானால் அதுவே அவனுக்கு முத்தி நிலைமையாம் என்பது. ஈண்டு அவாவென்றது வாசனாரூபமாக நிற்கும் ஆசையையாம். ஒன்றிலும் ஆசை வையாமல் பரிசுத்தனாயிருப்பதுதான் முத்தியென்பது நூல்களின் கருத்து. இவன் பிராரப்த கன்ம சரீரத்துடன் கூடியிருப்பினும் முத்தனேயாவான் என்பதில் ஐயமேயில்லை. இந்நிலைமை கைவந்தவனையே சீவன் முத்தனென்று ஆன்றோர் கூறுகின்றனர். நூல்களும் வியந்து கூறுகின்றன. இதுகாறுங் கூறியவாற்றால் காமம் வெகுளிமயக்க மென்னும் முக்குற்றங்களையும் பற்றற ஒழிப்பதுவே வீடுபேற்றுக்குக் காரணமாகிய உபாயமாமென்பது பெறப்பட்டது.

இவ்வுபாயங்களெல்லாம் கைவரப்பெற்றுச் சித்தியடைந்தாலும் பிராரப்த கன்மபயனை யிச்சரீரத்தால் அனுபவித்தே தீரவேண்டும். நல்வினைப் பயனால் இன்பங்களும், தீவினைப்பயனால் பலவகையான துன்பங்களும் நேரிடும். அவற்றினால் மதிமயங்காதிருத்தல்வேண்டும். மதிமயக்கமாவது இன்பத்தில் மகிழ்தலும் துன்பத்தில் வாட்டமடைதலுமாம். சரீரம் எடுத்ததற்குக் காரணமாயிருந்த நல்வினை தீவினைகளின் பயனை இன்னின்ன காலத்தில் இப்படியாக அனுபவித்தே தீரவேண்டுமென்பது சர்வ வல்லமையுள்ள கடவுளால் நியமிக்கப்பட்ட நியமமாம். இதனை விதி என்பர் வடநூலோர். தென்மொழியில் ஊழ் என்று கூறப்படும். விதியால் வரும் இன்ப துன்பங்களை அனுபவித்தொழிந்தால் பிராரப்த கன்மமும் தொலையும். அதனை அனுபவிப்பதற்கு இடமாயிருந்த சரீரமும் ஒழியும்.

ஒழிந்தால் அந்தச் சீவன்முக்தன் பந்த முற்றுமற்றுப் பிரமத்துடன் ஏக மாய்க் கலந்து போவதாகிய சாயுஜ்ய முத்தியை அடைந்துவிடுவான்.

கொடிய பிராரப்த கன்மப்பயனாகிய கொடுந்துன்பத்தை அனுபவிக்கும்போது எத்தகையருக்கும் சற்றுச் சித்தம் கலக்கமுறுவ தியல்பாதலால் அச்சமையம் ஆகாமிய கன்மம் உண்டாவதற் கேதுவான கன்மங்களைச் செய்யக்கூடும். அதனாற் பிரமாதம் உண்டாகும். அக்காலத்திலும், புண்ணிய கன்மபலனை யனுபவிக்கும்போதும் அவ்விருபயன்களையும் ஒரு தன்மையாகக் கருதி இன்பத்தில் மகிழாமலும் துன்பத்தில் துயருறாமலும் திடசித்தமுடையவனாயிருத்தல் வேண்டும். விதி மஹாவலிமையுடையது எவராலும் வெல்லற்கரியது. இதுபற்றியே

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

என்று ஊழின் வலியைப் புகழ்ந்து கூறினர் பொய்யாமொழியார். ஒருவராலுந் தடுக்கமுடியாத விதியின் வலியை யுணராதிருப்பதற்கு இன்பத்திற் களியாமையும் துன்பத்தில் வருந்தாமையுமே உபாயமாம். இவ்வுபாயத்தினாலன்றி வேறுவகையான உபாயம் இலதென்று நூல்கள் கூறும். ஆயினும் பெரியோர் சுயாநுபவத்தாற் கண்டறிந்து கூறிய உபாயமொன்றுண்டு. அதாவது தான் வழிபடுதெய்வத்தைத் தியானித்திருப்பதாம். அத்தெய்வத்தைச் சதா சிந்தித்துக்கொண் டிருக்கவேண்டும். கவலையற்று ஞானயோக சமாதி கூடியிருக்கவேண்டும். ஞானயோக சமாதியால் புளியம்பழமும் அதன் ஓடும்போல சரீரத்துடன் தாக்கற்று நிற்கும் தன்மையுண்டாகும். சரீரத்தோடு தாக்கற்று நின்றால் அச்சரீரத்துக்கு விதியால் நேரிடும் இன்பதுன்பங்களை ஆன்மாவுணராது. ஞானசமாதி கலைந்திருக்கும் சமயத்தில் வழிபடுங் கடவுளாகிய உபாசனாமூர்த்தியை மனமொழி மெய்கள் வேறுபடாமல் ஒன்றிச் சிந்திக்க அத்தெய்வம் விதியால்வருந் துன்பங்கள் தோன்றாதபடி தாங்கிக்கொள்ளும். அதாவது ஞானமயமான தெய்வ சொரூபத்தின் முன் மலமயமான கன்மப்பயன்கள் எதிர்த்து நில்லா. அந்த ஞானாக்கினியால் எரிந்துபோகும். தெய்வத் தியானமும் ஞான யோகமுமன்றி விதியை வெல்லும் உபாயமில்லை யென்று பக்தியிற் சிறந்த பெரியோர் கூறுகின்றனர்.

"நாளென்செயும் வினைதா னென்செயு மெனைநா டிவந்த
கோளென்செயுங் கொடுங் கூற்றென்செயுங் குமரே சரிரு
தாளுஞ்சி லம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்புமெனக்கு முன்னேவந்து தோன் றிடினே"

என்றதனால் சகல சொரூப திருவுருவச் சிந்தனையால் விதியையும் வெல்லலாமென்பது தோன்றவும்,

"சிந்திக்கி லேனின்று சேவிக்கி லேன்றண்டைச் சிற்றடியை
வந்திக்கி லேனொன்றும் வாழ்த்துகிலேன் மயில்வா கனனைச

சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கிலே னுண்மை சாதிக்கிலேன்
புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கே"

என்றதனால் விதியால்வரும் சரீரதுன்பத்தையும் மனோவியாகுலத்தையும் வெல்லக்கூடும் என்று அருணகிரிநாதர் கூறியருளினார். ஞானயோக சமாதிகலைந்து பிரபஞ்சந் தோன்றும்போது தனது உபாசனாமூர்த்தி யாகிய சகுணபிரமத்தைச் சிந்தித்திருப்பதே விதியின் வலியை வென்று ஞானயோகத்தில் நிலைத்து நிற்பதற்குத் தகுந்த உபாயமாகும். சகுண நிர்க்குண சொரூபங்களிரண்டும் பரப்பிரமத்துக்கு உரியனவேயாதலால் என்க. முற்றிற்று.

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## சற்சன சங்கம்.

உலகத்திலே மானிட ஜென்ம மெடுத்ததன் பயனை யடைதற்குரிய சாதனங்களுள், சற்சன சங்கமும் முக்கியமான வொன்றென்பது அனேக ரறிந்தவிஷயம். வித்தியாசாலை, பத்திரிகை முதலியவைகளால் நாமடையத் தகும் பயன் அற்பமல்ல. இவைகள் வாயிலாக நாமெய்தும் நன்மைக்காகப் பணஞ்செலவழித்தலும் சிறிது சிரத்தை யெடுத்தலும் அத்தியாவசியமே. தவிர, வேறு அதிகம் கஷ்டப்படவாவது யோசிக்கவாவது தேவையில்லை. ஏனெனில், வித்தியாசாலைகளை ஸ்தாபித்து நடத்துவோரும் பத்திரிகை களைப் பிரசுரம் செய்வோரும் பெரும்பாலும் அறிவிற் சிறந்த பெரியோ ராயும், மற்றவர்களுடைய நன்மையையும், ஈடேற்றத்தையுமே தம்மிலக் காகக் கொண்டவர்களாயுமிருப்பதால், நாம் தீயவழியிற் செல்வதற்கு அவர்கள் ஒருபோதும் காரணரா யிருக்கமாட்டார்கள். ஆனால், சற்சன சங்கமோ, வித்தியாசாலை, பத்திரிகை முதலியவைகளைப்போல் பொது ஜன நலத்தின் பொருட்டு ஏற்படுத்தப்பட்டு ஊர்கடோறும் எக்காலத் தும் நடத்தப்படுமொன்றன்று. இக்காரணம் பற்றியே சற்சன சங்கம், சாது சங்கமென்று வாய்ப்பறை யறைவோரைக் காணுகின்றோமேயன்றி, உன்னத பதவியை உண்மையா யடையச் செய்யும் சற்சன சங்கங்களை எங்கு தேடினும் காண்பதரிதாயிருக்கின்றது. துர்ச்சனர் பலர் ஒருங்கு சேர்ந்து சம்பாஷிக்கும் இடங்களோ ஒவ்வொரு கிராமத்திலு மிருக்கின் றனவென்று சொல்லக் கூடியதாயிருக்க, சற்சன சங்கங்கள் இல்லாமை க்கு அல்லது அவைகளின் குறைவுக்கு ஏது என்னவாயிருக்கக் கூடும்? சற்சன சங்கங்களின் வழியாக நாமடையக்கூடும் பெரும் சிலாக்கியங்களை நம்மவர் அறியாதிருக்கின்றார்களா? அல்லது கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த பெரியோர் ஒவ்வொரு கிராமத்திலும் சிலராவது இல்லையா? சற் சன சங்கங்களாலடையத்தகும் பெரும் பேறுகள் நம்மவரிற் சிலருக்காவது தெரிந்திராமலில்லை. இத்தகைய சங்கங்களின் அங்கத்தவராதற்கேற்ற இலட்சணங்கள் பொருந்தியவர்கள் ஒவ்வொரு கிராமத்திலும் சிலராவது காணப்படாமலு மில்லையென்று சொல்லுதல் தவறாகாது.

சற்சன சங்கங்கள் அளப்பரும் நன்மைபயக்கத் தக்கனவென்பது எம்மதத்தினருக்கும் சம்மதமானவோர் மறுக்கொணு வுண்மை. குருவும் சிஷ்யருங் கூடிப் பலமேலான விஷயங்களைப்பற்றிப் பேசிச் சிந்தித்துத் தெளிந்தமை பல காலத்திலும் பல சாதியாருக்குள்ளும் இருந்திருப்பதாக நாம் சரித்திரங்கள் வாயிலாக அறிகிறேம். நல்லவர்களோடு சகவாசம் செய்யும் பிலாக்கியம் ஒருவனுக்குக் கிடையாவிடின் அவனுக்கு ஏகாந்தமே இனிதென்று ஒரு அளவிற் சொல்லலாம். அறிவு அனுபவம் முதலியவற் ருல் மனுஷ சுபாவத்தை முற்றுமுணர்ந்த மேதாவியர் பலர், மேலான பதவியை யடைந்து மேன்மையுற விரும்புவோர்க்குச் சற்சன சங்கத்தைச் சார்தலின் அத்தியாவசியகத்தைப் பற்றிப் பன்முறை இடித்துரைத்திருக் கின்றனர். நாமொவ்வொருவரும் இதனுண்மையை நாடோறும் நமதனு பவத்திற் காணக்கூடியதா யிருக்கிறது. இப்படி யெல்லாமிருந்தும் நம்ம வரிலனேகர் மனத்தின் வசப்பட்டு மாளுதல் எவ்வளவு பரிதாபமான காரி யம்! மனம் இயல்பாய்க் கெட்ட காரியங்களைச் சார்ந்து அவற்றின் மய மாகும் தன்மை வாய்ந்ததாக விருக்கின்றது. இதன் நிமித்தந்தான் மன தைத் திருத்தி நல்வழிப் படுத்தும் நோக்கத்துடன் அனேக ஸ்தாபனங் கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. நாமொவ்வொருவரும் தம்தம் பழைய வாசனையின் வசப்பட்டுப் பழகினவற்றையே செய்யும் பான்மையுடைய வராயிருக்கின்றேம். இது நூதனமல்ல; இயற்கைக்கு இது மிகவும் பொரு த்தமானது தான். ஒரு மனுஷனை எப்படிப்பட்டவனென்று அறிகிறதற்கு அவன் கூடித்திரியும் கூட்டத்தை ஆராய்வதே நிச்சயமான வழியென்று அனேக சாஸ்திரங்கள் கூறுவது மாத்திரமன்றி, நமதனுபவத்திலும் காணலாம். எப்பொழுதும் ஒரு மனிதன் தன்னுடைய போக்குள்ளவர் களையே தேடிச் சினேகங்கொள்ள நினைப்பான். இதற்காகவே ஒருவன் இன்னொருவனேடு சினேகங்கொள்ளும் விஷயத்தில் மிகவும் கவனமா யிருக்கவேண்டுமென்று சொல்லுவதுண்டு. எவ்வகையான தீமைகளுக்கும் உறைவிடமாயிருப்பவனும் இடைவிடாது சற்சன சங்கத்தின் சகவாசத் தைச் சார்ந்து நிற்பனேல் அவன் அத்தீமைகளினின்றும் நீங்கி, நல்லவனுய் மாறுதல் நிச்சயம். அப்படியே நல்லவனென்று மற்றவர்களால் மதிக்கப் படுமொருவன் கெட்டவர்களுடைய கூட்டத்தில் இட்டமாய்க் கூடிக்குலா விஞல் அவனிடத்திற் காணப்படும் சற்குணங்களெல்லாம் பரிதிகண்ட பனிபோற் பறந்துவிடும். ஆகையால் நாம் ஒவ்வொருவரும் மனிதருடைய மதிப்பையும் கடவுளுடைய அருளையும் பெறவிரும்பிஞல் என்ன செய்தல் வேண்டும்?

சீவனுர்த்தமாக நாம் செய்யும் தொழில்களிற் செலவாகுங் காலம் போக மற்றைய நேரமெல்லாம் நாமனைவரும் அறிவு வளர்ச்சிக்குரிய புத்த கம் பத்திரிகை முதலியவைகளை வாசித்தலோடுகூட, சற்சனரைத் தேடி அவர்களோடு கூடும் பழக்கத்தையும் பழகிக்கொள்ளுதல் அவசியம். அது ஒருபோதும் தானுய் வராது. "ஏகாந்தம் இனிது" என்று சொல்லப்பட்

டிருப்பினும், தனியே யிருக்கும்பொழுது நம்முடைய மனத்தில் நிகழும் எண்ணங்களை உற்று நோக்குமிடத்து அங்கிலே உசிதம்போல் தோற்றுது. வேலையில்லாதிருப்பவர்களுக்குச் சாத்தான் இடைவிடாது வேலை கொடுத்துக்கொண்டே யிருப்பானென்று சொல்வதுண்டு. நல்லவர்கள் சிலராவது இல்லாத கிராமங்கள் உலகத்திலிருப்பது இயற்கைக்கு விரோதமான விஷயம். ஒருவன் தான் மாத்திரம் நல்லவனு யிருத்தலோடு நின்று விடாது, மற்றவர்களையும் தன்னைப்போல் நல்லவர்களாக்க முயன்று அதற்காக வேலை செய்வது மிகவும் விசேஷமான ஊழியமென்று கருதப் படத்தக்கது. மனம் எப்பொழுதும் ஏதாவதொன்றைப் பற்றும் தன்மையுடையது. ஆதலால் நம்முடைய மனம் மேலான காரியங்களிலேயே எப்பொழுதும் பற்று வைக்கத்தக்கதாய், நாமறிந்துள்ள சற்குணராயுள்ளோரை ஒருங்கு திரட்டி, அவர்களை அங்கத்தவராய்க்கொண்ட ஒரு சங்கத்தை ஏற்படுத்துவது நம்மேற் பொறுத்த பெருங்கடனுகும். ஒவ்வொரு கிராமத்திலும் இப்படிப்பட்ட சங்கங்கள் ஸ்தாபிக்கப்படுமாயின், அக்கிராமங்களில் தீமைக்குச் சாதனமாயுள்ள ஸ்தாபனங்களெல்லாம் நிலைகுலைந்து அடியற்றுக் கீழே விழுந்துவிடும். இப்படிப்பட்ட சங்கங்கள் வாயிலாக அவ்வக்கிராமங்களுக்கு வரக்கூடிய நன்மைகள் பலவாகும்.

பேச்சோடு மாத்திரம் நின்று விடுவதாற் பயனில்லை. செய்கையிலே வந்தபின்தான் இப்படிப்பட்ட காரியங்களின் நன்மை முற்றும் விளங்கத் தக்கதாகவும், அதனுலடையும் பயன்களால் அகம்மகிழத் தக்கதாகவுமிருக்கும். தாங்கள் மாத்திரம் நல்லவர்களாயிருந்தாற் போதும், மற்றவர்கள் எக்கேடு கெட்டாலும் சரியென்று எண்ணுதல் ஒருபோதும் நல்லதல்ல. ஒவ்வொரு கிராமத்திலுமுள்ள அறிவிற் சிறந்த பெரியோர் சற்சன சங்கங்களைக் கூட்டி அவைகளுக்கு அங்கத்தவராக வர அக்கிராமவாசிகளை ஏவுதல்வேண்டும். தொடக்கத்தில் பின்னிற்பவர்களும் காலஞ் செல்லச்செல்ல அச்சங்கங்களுக்கிருக்கும் கண்ணியத்தையும்,அவைகளுக்கூடாக நடக்கும் நன்மை பயக்கத்தகுங் காரியங்களையுங் காணக்காணத் தாங்களாய் இப்படிப்பட்ட சங்கங்களைச் சேர விரும்புவார்கள். ஒருமுறை இருமுறை தொடங்கிவிட்டுப் பிரதிகூலமாவதைக் கண்டு மனந்தளர்ந்து முடியாத காரியமென்று நினைத்து இப்படிப்பட்ட மேலான முயற்சிகளைச் சோரவிடுதல் அழகல்ல. மனஉறுதியோடும் விடாமுயற்சியுடனும் தொடங்கி நடத்தப்படும் எக் காரியமும் சித்தி யெய்தாமலிராது. பயனற்ற சம்பாஷணையிலும், அவசியமற்ற விஷயங்களிலும் எவ்வளவு நேரத்தை வீணுகக் கழிக்கின்றோம். இம்மை மறுமை யிரண்டிற்கும் உதவியாயிருத்தற்குச் சாதனமாயுள்ள சற்சன சங்கத்தில் ஏன் நாம் நமது விலை யுயர்ந்த நேரத்தைக் கழித்தல் கூடாது? இவ்விஷயத்தை வாசிக்கும் ஒவ்வொருவருடைய மனத்திலும் "நான் சற்சன சங்கத்தைச் சார்ந்தவனுயிருக்கின்றேனு?" என்னுங் கேள்வி எழுதல்வேண்டும். அப்படியில்லாதவர்களுக்கு உடனே

ஓர் சாதுசங்கத்தைத் தேடி யடையவேண்டு மென்னும் எண்ணம் மனதில் உதித்தல் வேண்டும். ஊர்கடோறும் உண்மையான சற்சன சங்கங்களிருக்குமாயின் அவை வாயிலாக நாமெய்தற்கரும் பதவியை இலகுவிலடையத் தக்கதாயிருக்கும். சொல்லரும் நன்மைவாய்ந்த இம்மேலான விஷயத்தை ஊன்றி யோசித்து ஊக்கமாய் நாம் அனுகூலமெய்தச் செய்தற்கு எல்லாம் வல்ல ஈசன் அருள் புரிவாராக.

கா. சின்னப்பா,
அளவெட்டி, யாழ்ப்பாணம்.

குறிப்பு:—நமது நண்பர் கூறுகிறபடி சத்சங்கங்கள் இருக்கவேண்டுவது அவசியமே. அவற்றால் மோக்ஷமே பெறலாமென்னில் மற்ற பலன்களை யடைவோம் என்பதைப்பற்றி கூறவும் வேண்டுமோ. சத்சங்கம் என்றால் சன்மார்க்கங்களையுடையோர் கூட்டம் என்பது பொருள். சன்மார்க்கங்கள் மதசம்பந்தமுடையவைகளாக விருந்தால் தான் நிலைத்திருக்கும். இன்றேல் வாசாஞானமாய்ப் பல தருமங்களைப் பிறர்க்குப் போதிப்பதும் தமது சுயநல காரியம் கை கூடுவதற்கெனில் எத்தகைய அக்கிரமங்களையும் செய்கிறதாகவேயிருக்கும். ஈசுவர பக்தி யுடையோரிடம் சன்மார்க்கங்கள் நிலைத்திருக்கும். ஆதலின் சன்மார்க்க சங்கத்தின் மூலபுருடர்கள் ஆன்மார்த்தக் கல்வியும் உடையவர்களாக விருக்கவேண்டும். பிறகு சங்கத்தில் சேர்வோர்க்கும் அக் கல்வியைப் போதிக்கவேண்டும். ஈசுவர பக்தியோடும் நம்பிக்கையோடும் தொடங்கப்படும் நன் முயற்சிகள் கட்டாயம் பயனளித்தே தீரும். ஆனால் சற்சனசங்கத்தைத் தாபித்து விடுவதில் மட்டும் பயன் ஏற்பட்டுவிடாது. அதில் சேரும் மூலகாரணராகிய அறிவாளிகள் சுயநலம் கருதாத உத்தமர்களாய்ப் பொது நலத்திற்குழைப்பவர்களாய் இருக்கவேண்டும். அவர்கள் தற்காலத்தில் நம்மவருடைய முன்னேற்றத்திற்கு அவசியமானவையும், இகபர நன்மைகளைப் பெறுவதற்குச் சாதனமாகிய நீதிகளையும், படிப்பினைகளையும் யாவர்க்கும் போதித்து அவற்றின்படி யவர்கள் நடக்குமாறு செய்யவேண்டும் அப்படிச் செய்தால் பெரும்பய னுண்டாகுமென்பதில் ஐயமில்லை.

இவையாவும் சரியே. நாம் இவ்வளவு வரைந்தோம். ஆனால் இதை வாசிப்போர் ஒரு கதையைப்போல் வாசித்துவிட்டு அதோடு மறந்துவிட்டால் என்ன பயன்? நம்மவர் இன்னும் இத்தகைய நிலைமையிற்றான் இருக்கின்றனர். இதை வாசிப்போரில் அறிவாளியாக வுள்ள ஒவ்வொருவர் ஆங்காங்கு முன்வந்து முயற்சி யெடுத்துக்கொண்டு ஐந்தாறு பேர்களையேனும் சேர்த்து ஒரு சங்கத்தைத்தாபித்தால் பிறகு அது விர்த்தியடைய அனுகூலமுண்டாகும். இன்றேல் என்றும் பழைய கந்தனாகவிருக்க வேண்டியதே.

பத்திரிகாசிரியர்.

---

# மேல்நாட்டு நாகரீகம்.

சகோதர சகோதரிகளே! நம்மவரில் சிலர், விசேடமாய் ஆங்கிலம் கற்றவர்கள்; மேல்நாட்டு நாகரீக ஆசார ஒழுக்கங்களின்படி நடப்பதே சீர்திருத்தமென்றும், அப்படி நடந்தால்தான் நம் தாய்நாடு முன்னேற்றமடையுமென்றும் கருதுகிருர்கள்.

இவ்விஷயத்தில் உலகப்பிரசித்திபெற்றவரும் இணையற்ற கவிவாணருமாகிய ஸ்ரீமான் இரவீந்தரநாத தாகூர் என்ற பெரியார் கூறிய அபிப்பிராயத்தை யீண்டு வெளியிடுகிரேம்.

(அப்பெரியார் சீனதேசத்தவர்களுக்குப் போதித்ததாக இச்செப்டம்பர்மீ "மாடர்ன் ரிவ்யூ" சஞ்சிகையில் வெளியிடப்பட்டிருப்பதை யீண்டு மொழிபெயர்த்துப் பிரசுரிக்கிரேம்.)

"நான் உங்களிடம் வந்ததற்காக நீங்கள் சந்தோஷப்படுகிறீர்கள். ஆசியா நெடுங்காலமாகத் தன் எண்ணத்தை வெளியிடக் காத்துக்கொண்டிருந்தது; இன்னும் காத்துக்கொண்டிருக்கிறது என்று நான் உணர்கிறேன். எப்போதுமே இப்படி யிருந்ததில்லை. ஆசியா உலகத்தையே முரட்டுத்தனமான அநாகரீகத்தினின்றும் ஒருகாலத்தில் காப்பாற்றியிருக்கிறது. அதன்பிறகு இரவு (கலி) வந்துவிட்டது. அது எப்படி வந்ததோ எனக்குத் தெரியவில்லை. ஐரோபா (ஐரோபியர்) வல்லமை, புத்தி சாமார்த்தியம் இவற்ருலுண்டான மமதையோடு நம்மிடம் வந்தபோது நாம் அதை யேற்றுக்கொள்ள ஆயத்தமாக விருக்கவில்லை. அதனுற்ருன் ஐரோபா ஆசியாவை மேற்கொண்டது. நாம் ஐரோபாவை சமத்வமான பாவமாகச் சந்திக்காதது தவருய்விட்டது.

அதன் பயனுக உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற முறைமையும், ஒரு பக்கம் அவமதிப்பான திரஸ்காரமும், மற்றொரு பக்கம் மனத்தாழ்வான வணக்கமும் ஏற்பட்டுவிட்டன. நாம் எதையும் யாசகரைப்போல் பெற்றுக்கொண்டிருந்தோம். நமக்குச் சொந்தமாக நாம் ஒன்றையும் உடைத்தாயிருக்கவில்லை என்று எண்ணிக்கொண்டிருந்தோம். நம்மிடம் சுய நம்பிக்கை யில்லாததாலேயே நாம் இன்னும் வருந்திக்கொண் டிருக்கிறும். நம்மிடமிருக்கும் பொக்கிஷமே நமக்குத் தெரியாது. (மேற்கு) மேல்நாட்டார் தங்களிடமிருக்கும் உயர்ந்த பொருளை நமக்குக் கொடுப்பதற்காக நம்மிடம் வரவில்லை. ஆனல் நம்மிடமிருக்கும் உலகப் பொருளைக் கொள்ளை யடிக்கவே வந்தார்கள்.

நாம் நமது உறக்கத்தினின்றும் எழுந்திருந்து நாம் பிச்சைக்காரரல்லவென்பதை நிரூபிக்கவேண்டும். அது நமது பொறுப்பு. அழியாத மதிப்புடைய பொருள்களுக்காக உங்களகங்களிலேயே தேடிப்பாருங்கள். அதன் பிறகு நீங்கள் காப்பாற்றப்படுவீர்கள். ஜனசமூகங்களைக் காப்பாற்றவும் சக்தியுடையவர்களாவீர்கள். மேல் நாடுகள் ஜெயமுடையவை

களாயிருப்பதால் அநீதியில் அமிழ்ந்துகொண்டு வருகின்றன. நாம் நமது பிறப்புரிமையை யடையவேண்டும். கீழ் நாட்டாரில் சிலர் நாம் மேல் நாட்டாரைப் பின்பற்றி நடக்கவேண்டுமென்று கருதுகிறார்கள். நான் அதை நம்பவில்லை. மேல் நாட்டார் உண்டாக்கிக்கொண்டது மேல் நாட்டாருக்கே தக்கது. ஏனெனில் அது அங்கு பிறந்தது. கிழக்கு நாட்டாராகிய நாம் மேல் நாட்டு எண்ணங்களையும் குணங்களையும் இரவல் வாங்கிக்கொள்ளலாகாது.

நாம் நமது நீதியிலும் தெய்வீகமான ஆன்ம சக்தியிலும் வைத்திருக்கும் நம்பிக்கையைக்கொண்டு யுத்தம் செய்யவேண்டும். கிழக்கு நாட்டாராகிய நாம் சேனாதிபதிகளையேனும், பொய்யைக் கையாளும் இராஜ தந்திரிகளையேனும் எக்காலத்தும் பூஜித்ததில்லை. நாம் பூஜிப்பது ஆன்மார்த்த ஆசாரியர்களையே. நாம் அவர்கள் மூலமாகவே காப்பாற்றப்படவேண்டும். இன்றேல் வேண்டவேவேண்டாம். மிருகபலம் முடிவில் வல்லமையுடையதல்ல. அவ்வல்லமை தன்னையே யழிக்கிறது. எந்திர பீரங்கிகளும் ஆகாய விமானங்களும் தங்கள் கீழ் உயிருள்ள மனிதர்களை நசுக்குகின்றன. மேல் நாடுகள் அழியும் வழியில் சென்றுகொண்டிருக்கின்றன. சுயநலத்திலும், மிருகத்தன்மையிலும் போட்டி போடுவதில் நாம் மேல் நாட்டாரைப் பின்பற்றமாட்டோம்.''

சகோதர சகோதரிகளே! இவ்வுலகிலுள்ள எல்லா நாட்டாராலும் புகழப்படும் நம் நாட்டுப் பெரியாரின் மேற்கண்ட போதனைகள் நாம் ஒவ்வொருவரும் அவசியம் ஆழ்ந்து கவனிக்கத் தக்கவைகளாகும். அத்தகையாரது மொழிகளை யலட்சியம் செய்யின் நாம் க்ஷேமமுறமாட்டோம் என்பது நாம் கூறாமலே யாவர்க்கும் நன்கு விளங்குமென நம்புகிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

ஓர் கடிதம்.

காம்போலா,
21—9—24.

ஐயா,

தயவுசெய்து கீழ்க்காணும் புத்தகங்களை வி-பி-மூலமாக என்னுடைய விலாசத்திற்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்ரீமான் ஆரணி குப்புசாமி முதலியார் அவர்கள் எழுதியுள்ள நாவல்களின் ஜாபிதா ஒன்றும் தயவுசெய்து அனுப்பி வைக்கவேண்டியது. அவர் நாவல்களே வாசிக்கத் தகுதியானவை யென்பதை நான் திடமாய்ச் சொல்லுவேன். நாவல்கள் எழுதிப் பணம் சம்பாதிக்க வேணுமென்ற எண்ணங்கொண்ட அநேகர் அசுத்த ஆபாசமான நாவல்களையும் நம் நாட்டு மாதர்கள் வாசித்து கற்பை நிலைநிறுத்தாது இழக்கக்கூடிய ஒரு வழியிலும், பொதுவான அபிப்பிராயத்தைக் கெடுத்து நாவல்களே வாசிக்கக் கூடாதென்று அநேகர் நம்பும்படியான வழியிலும் எழுதி ஏற்கனவேயும் இப்போதும் எழுதப்பட்டு வரும் உத்தமர்களுடைய நாவல்கள்—புத்தி புகட்டக்கூடியவைகளின் மதிப்

யையும் கெடுத்து விடுகிறார்கள். ஆனால் அவர்கள் எழுதும் நாவல்கள் இப்பொழுது தற்கால அன்னிய நாகரீகப் பேய் பிடித்தலையும் வாலிபர்களை மயக்கக் கூடியவைகளாயிருக்கலாம். ஆகச்சே தயவு செய்து இனியேனும் ஷை காரியம் நடைபெறாமலும், பொதுஜனங்கள் ஷை நாவல்களைப் பணம் கொடுத்து வாங்கி வீண்காலம் போக்குவதும் தவிர, பணச்செலவும் புத்தி கெடுவதுமே முதற் பலனாகக் கிடைப்பதால் தங்களுடைய சஞ்சிகையில் அவசியம் இதை வெளியிட்டு ஓர் வியாசம் எழுதி பண ஆசைகொண்டு நாவல்கள் எழுதிப் பொதுஜன அபிப்பிராயத்தைக் கெடுக்கும் நாவல்களை வாங்கி வாசிக்காமற் செய்து, நம் ஸ்ரீமான் ஆரணி குப்புசாமி முதலியாருடைய நாவல்களே முதல்தரமானவையென்று விளக்கிக் காட்டுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

நான் இதில் எழுதியுள்ளவற்றை என் அனுபவத்தாலே எழுதினேன். நானே அனேகமாய் பணத்தை வீண்செலவு செய்துவிட்டிருக்கிறேன். அத்தாட்சிக்காக வேணுமென்றாலும் நான் சில நாவல்களை அவசியம் அனுப்பப்பின்னிடேன்.

S. K. ALLAGAPPAN,
Pussetenne Estate,
Gampola, Ceylon.

குறிப்பு:—சந்தா நேயராகிய நமது நண்பர் நமது ஸ்ரீமான் ஆரணி குப்புசாமி முதலியாரவர்கள் நாவல்களைப்பற்றி வரைந்துள்ள விஷயத்தை வற்புறுத்துவதற்காக நாம் இதை வரையவில்லை. வேறு எதற்காகவெனின் கூறுகிறோம்.

போதுமான கல்வியிலாதோரும், பல நூல்களைக் கற்காதோரும், உலக அனுபவம் சற்றுமில்லாதோரும், நாவல் வரையும் இயற்கைத் திறம் இல்லாதோரும், யாவருமே இக்காலத்தில் நாவல் வரையத் தொடங்கிவிட்டனர். அதனால் ஒரு சாரார் நாவல்களே வாசிக்கக்கூடாதென்றும், மாதர்கள் அவற்றை வாசித்தால் நெறியழிந்து விடுவார்களென்றும் கூறுகின்றனர். இவ்வாறு பொதுவாய் எல்லா நாவல்களையும் தகுதியற்றவையென்று கூறி விடுவது தவறேயாகும். ஏனெனில் அறிவை விசாலிக்கச்செய்து நற்புத்தி புகட்டக்கூடிய நாவல்கள் அனேகமுள.

ஆதலின் நாவல் வாசிப்போர், நற்புத்தி புகட்டுவதும், நம் நாட்டிற்குப் பெருந்தீங்கை விளைவிக்கும் அன்னிய நாட்டு ஆசார ஒழுக்கங்களைச் சிலாகித்துக் கூறாததும், அவற்றைப்பற்றி கூற நேரும்போது அவற்றாலுண்டாகும் தீங்குகளை விளக்கிக்காட்டி அவற்றின் தகுதியின்மையை விளங்கச்செய்வதும், வாசிப்போர்க்குச் சிற்றின்ப விஷயங்களில் மனக்கிளர்ச்சியை யுண்டாக்காததும், நம் குடும்பமாதரும் கன்னிகைகளும் வாசிக்க அசங்கியப்படத்தக்க வார்த்தைகளும், வாசிக்கத்தகாத வார்த்தைகளும் அடங்கியில்லாததும், ஜாதிமதத் துவேஷங்களை யுண்டாக்கும் விஷயங்

களடங்கி யிராததும், தாய் நாட்டின் முன்னேற்றத்திற்காக நம்மவர் நடந்து கொள்ளவேண்டிய நெறிகளைப் போதிப்பதும், துர் நடக்கைகளில் வெறுப்பும் நன்னடக்கைகளில் விருப்பும் உண்டாகச் செய்வதும் ஆகிய இத்தகைய நாவல்களையே நம் மக்களுக்கு வாசிக்கக் கொடுக்கவேண்டும்.

பத்திராதிபர்.

---

## மாதர் நீதி மஞ்சரி.

(116-ம் பக்கத் தொடர்ச்சி.)

மனோன்மணியம்மாள்:—இக்கேள்வி பால்ய விவாகத்திற்குச் சம்பந்தப்பட்டதன்று. மாந்தரது வாழ்க்கையில் விவாகம் ஓர் முக்கியமான மாறுதலை யுண்டு பண்ணுவதாகும். மிக்க இன்பகரமான காலம் அதுவே. அவ்வின்பம் நீடித்திருக்க வேண்டுமென்னும் நோக்கத்துடனே செய்யப்படுகின்றதெனினும், அது இன்பமே பயக்குமோ? அதற்கு மாறாகத் துன்பமே பயக்குமோ? எவரறிவார்? எப்படியாயினும் மணம், மிக்க மேன்மையும் தூய்மையுமுள்ளது. கேவலம் வியாபாரமல்ல. விவாகத்தால் பிணைக்கப்பட்ட இருவர், மரணத்தாலன்றிப் பிரிதற்குரியராகார். பெண்ணினின்பம் புருஷனிடத்தும், புருஷனின்பம் பெண்ணினிடத்தும், ஒப்புவிக்கப்பட்டிருத்தலால், அவ்விருவரும் மனவொற்றுமைப்பட் டிருந்தாலன்றித் தத்தம் இன்பங்களைப் பெற்று வாழுதலியலாது. மனைவியானவள் வெறும் பணிவிடைக்குரியவள், புத்திரோற்பத்தி இயந்திரம் என்று கணவனும் கணவன் தன்னின்பத்திற்காகக் கொண்டவன், நமக்கு வேண்டியவற்றைத் தரற்குரியவன் என்று மனையாளும் நினையாமல், இருவரும் ஒருவருக்கொருவர் உற்ற வாழ்க்கைத் துணைவரென்றும் நல்லறமாகிய இல்லறமென்னும் சகடத்தை இழுத்துச்செல்ல நுகத்தைப் பிடரின்மேற் கொண்டுள்ளவர்களென்றும், அதனாலுண்டாகும் இன்பதுன்பங்களிற் சமவுரிமை யுடையவர்களென்றும், எவ்வகையிலும் மற்றவர் சுகத்தை நாடுதலே நம் கடமையென்றும் கருதி யொழுகினாலன்றி, அவர்கள் தம் கடமையை யுணர்ந்தவரும் அதனாலுண்டாம் பயனை யடைபவருமாகார். கேவலம் காமநுகர்ச்சி விவாகத்தின் நோக்கமல்ல. அது மிருக சுபாவம்.

தாய் தந்தையர் தக்க வரனைத்தேடித் தம் பெண்களுக்கு விவாகம் செய்விப்பதே நம் நாட்டுத் தொன்றுதொட்ட வழக்கமெனினும், பெண்களே தாம் பிரியப்பட்டவனை மணப்பதும் வழக்கத்தில் இருந்தது. ஆனால், அது, ஆடவருடன் பழகி, அவ்வவர்களின் குணகுணங்களையறிந்து, பின்பு, தன் மனத்திற்குப் பிடித்தமானவனைத் தேர்ந்தெடுத்து மணந்துகொள்வதென மேல்நாட்டாரால் கையாளப்பட்டுவரும் தற்கால முறை போன்றதன்று. அங்ஙனமாயின், நாணம் அச்சம் முதலியவை நாடுதற்கிடமெங்கே? அவ்வழக்கமும், க்ஷத்திரியர்க்குள்ளே யிருந்ததாகத் தெரிகிறதேயன்றி, ஏனையோரிடமிருந்ததாகக் காணப்படவில்லை. அதற்கே காந்தருவமணம், சுயம்

வரம் எனப்பெயர். காந்தருவமானது, கந்தருவரென்னும் ஓர் வகை தேவப்பகுப்பினருக்குரியது. ஓரரசன் எல்லாத்தேச ராஜகுமாரர்களையும் நாள் குறித்து, ஓலை போக்கிக் கூட்டிய மண்டபத்தில் தன் மகளை வரவழைக்க, அவ்வரசர்களது நாடு நாமம் வீரம் முதலியவற்றைத் தோழிகள் கூறக்கேட்டு, அக்கன்னிகை தனக்குப் பிரியமானவனை மாலை சூட்டி, மணாளனைக் கொள்வது சுயம்வரம் என்னப்படும். வீர சுல்கமமைத்து அதில் வெற்றி யுற்றோனை வரித்தலுமுண்டு. (இவ் வழக்கமும் முற்காலத்தில் நம் நாட்டு அரசரால் கையாளப்பட்டு வந்தது.)

வரனைக்கொள்ளும் விஷயத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அபிப்பிராயமுண்டு. பெண்ணின் தகப்பன் சிறந்த கல்வி கற்றவனையும், தாயார் பணக்காரனையும், சுற்றத்தார் குலப்பழுதில்லாதவனையும், பெண் அழகுள்ளவனையும் அடைய ஆசிப்பது சாதாரணம். இந்நான்கும் உடையோனே யாவராலும் விரும்பப்படுவான்.

பெண் தன் பிரியப்படி வரிப்பதாயின், அழகுள்ளவனையே கோருவாள். கல்வி கற்றவளாய் கற்றவனையே காதலிப்பவளாயினும், அவளுடைய வயதும்அவ்வயதிற்றோன்றும் உணர்ச்சியும் அழகையே விரும்பக் கூடியவை. ஏனெனில் அந்த வயதில் காமநுகர்ச்சி யொன்றே அவர்களது முக்கிய நோக்கமாக மேற்பட்டிருக்கும். இக்குறுகிய புத்தியுடன் கூடுவோர் நேசம் நீடித்திராது. காலக்கிரமத்தில் குறைந்துபோகும். போகவே பிற்காலஜீவியம் சுகமற்றதாகும். ஏன் விவாகம் செய்துகொண்டோம்! விவாகமில்லாதிருந்தால் சுகமாயிருக்குமே என்று வருந்த நேரும். அநேக அயோக்கியவாலிபர் தங்கள் அயோக்கியத்தன்மை தோன்றாதபடி நடித்து, கண்பகட்டான ஆடை அணிகளால் அலங்காரம் செய்துகொண்டு பேதைப் பெண்களை மயக்குந் தொழிலை மேற்கொண்டிருப்பார்கள். அவர்தம் மாயவலையிற் சிக்குண்ட மாதர்கள் கதி அதோகதியாக முடியும். ஒருவரையொருவர் காதலித்துக்கொண்டால் தான், அவர்கள் அன்புற்று இன்புற்று வாழ்வார்களென்று சிலர் கருதலாகும். நல்லாரெனக் கருதி, நனி விரும்பிச் சேர்ந்தவர்கள் அங்ஙனஞ் சேர்ந்தபின் தாம் எண்ணியது சரியோ அன்றோ? அதாவது தம்மால் காதலித்துக் கொள்ளப்பட்டவர் தாம் கருதியபடி நற்குணமுடையவரோ அல்லரோ எனக் குற்றம் பார்ப்பதிலேயே கவனமுடையவராவது சாதாரணம். அவ்வாறு பரிசோதனையிற் பிரவேசித்தவர் குற்றங் கண்டுவிட்டால் யாது செய்வார்? அவர் அன்பு யாதாம்! இன்றேல், இம்முறையே சிறந்ததெனக் கையாளும் மேல் நாட்டில் வருடந்தோறும் நூற்றுக்கணக்கான விவாக விடுதலை வழக்குகள் நேரிடுவதேன்? அவர்கள் தத்தமக்குப் பிரியமானவர்களைத் தேடி மணந்தவர்களே யன்றோ? இத்தியாதி காரணங்களால் உற்று நோக்குமிடத்து இம்முறை ஒழுங்கானதாகாதென்பது விவேகிகளுக்கு நன்கு விளங்கும்.

பெண்ணின் சுகவாழ்க்கைக்காகக் கவலை கொண்டவர்களில் பெற்றோ

ரினும் சிறந்தவர்களிலர். ஆண் பிள்ளைகளைப்பற்றிய கவலையினும் பெண்க ளைப்பற்றிய கவலையே நம் நாட்டுப் பெற்றோருக்கதிகம் என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். "மானமாய்ப் பிழைக்க வேண்டுமென்றவர்களுக்குப் பெ ண்கள் பிறந்தால் அதைவிடத் துக்கமுண்டோ? பிறந்த குலத்தையும், புகு ந்த குலத்தையும், அவமானமில்லாமல் அவள் காப்பாற்றவேண்டுமென்று எப்பொழுதும் பெற்றோர்கள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக் கிறார்கள்" என்று வான்மீகிமுனிவர் கூறியுள்ளார். விவாகப்பருவமடைந்த பெண்ணையுடைய தாய்தந்தையர்க்கு இரவும் பகலும் இடைவிடாக் கவலை "தக்கவரன்! தக்கவரன்!" என்பதே. ஆகலின் தம் மகளின் அழகுக்கும், கல் விக்கும், குணத்திற்கும் ஏற்றபடி எவ்விடத்தில் அழகும், கல்வியும், குணமு முள்ள பிள்ளை கிடைப்பானோவெனத் தேடுவதே அவர்களுடைய ஓயாத வேலை. ஒருவரன் கிடைத்தால் அவனைப்பற்றித் தாங்கள் தெரிந்துகொண் டதுமட்டும் போதாதென்று தங்கள் க்ஷேமத்தைக்கோரும் மற்றப் பெரி யோர்களையும் தீர விசாரித்து, அவர்கள் சம்மதத்தையும் பெறுவதுமன்றி, பல முறையும் ஜாதகம் முதலியவற்றையும் நன்கு பரிசோதித்துத் திருப்தி யடைந்தபிறகே தம்பெண்ணை அப்பிள்ளைக்குக் கொடுத்து, விவாகம்செய் விப்பது வழக்கம். இதைவிட அதிகமாய் ஒரு கன்னிகை கணவனைத் தேர்ந் தெடுக்க வியலுமோ? இது மட்டுமல்ல, தாய்மார் பெண்ணின் சம்மதத் தையும் வெகு சாமார்த்தியமாய் தெரிந்துகொள்ளக் கூடியவர்கள். விவா கம் பேசிக்கொண் டிருக்கும்பொழுதே அவன் அப்பெண்ணுக்குப் பிரியப் படாவிட்டால் அவள் முகம் அதை வெளிப்படுத்தி விடும். அதைக் கண் டேனும், அவள் வாய்ப்பிறப்பைக் கொண்டேனும், அல்லது அவள் தோழி கள் மூலமாகவேனும் அவள் கருத்தைத் தாயார் தெரிந்துகொள்வாள்.

ஒரு வஸ்துவை நல்லதாகத் தெரிந்தெடுக்க வேண்டுமாயின், அப் பொருளின் குணகுணங்களைக் கண்டறியும் வன்மையுடையோரே அந்த வேலைக்குத் தக்கவராவார் என்பது உலகப் பிரசித்தம். ஆகவே கிணற்றுத் தவளைபோல, உலக வியல்பறியாத ஒரு பெண் எங்ஙனம் தனக்குத்தானே தக்கவரனைத் தேடி யடைவாள். இயலாதன்றோ! தக்க யோக்கியதை யில்லாதவனிடத்தும் அறியாமையால் ஒரு பெண் தன் கருத்தைச் செலு த்தலாம். அதைக்கொண்டே விவாகம் செய்தல் எங்கேனும் உசித மாகுமோ?

ஆகையால், தாய் தந்தையர் பெண்ணின் மனதையுமறிந்து தக்கவர னுக்கு அவளை மணம் செய்விப்பதே உத்தமமான மார்க்கம் என்க. ஆனால் சில விடங்களில் பெண்களைப் பெற்றோர் தங்கள் தரித்திர காரணமாகப் பணக்காரனைப் பார்த்து இரண்டாந்தாரமாகவோ மூன்றாந்தாரமாகவோ- 50 வயது, 60 வயது சென்றவனாயினும் விவாகம்செய்து கொடுத்து விடு கிறார்கள். இவ்வாறு பெண்களைப் பெற்றுப் பிழைப்பிற்கு வழிதேடும் பேதையரைப் பெற்றோராகக்கொண்ட பெண்கள் மாத்திரம் வேண்டு மானால் அவர்கள் சம்மதிக்காவிட்டாலும் கௌரவக் குறை வுண்டாகாத்

படி தக்க கணவனைத் தேடி மணந்து கொள்வது குற்றமாகாது என்று கருத வேண்டியிருக்கிறது. இவ்விஷயத்திற் பெற்றோர் மிக்க எச்சரிக்கையாயிருத்தல் வேண்டும். பெண்களின் விவாகம் பெற்றோர் பொருட்டல்ல, பெண்களின் எதிர்கால சுகவாழ்வைக் குறித்தது. பெண்களிலும் பலர் அதிகாரம் ஆபரணம் முதலியவற்றிற் காசைப்பட்டு வயோதிகரை வதுவை செய்து கொள்பவர்களா யிருக்கின்றனர். அவர்களைப்பற்றி நாம் கூறுவது யாது ?''

மக்களே ! நான் கூறிய விஷயத்தைக் குறித்து உங்கள் அபிப்பிராயம் என்ன ?

மரகதம்:—தாயே ! தாங்கள் கூறியவையே மிகப் பொருத்தமாக இருக்கின்றன. தம் க்ஷேமத்தைக் கோரும் தாய் தந்தையரால் தேர்ந்தெடுக்கப்படும் வரனையே மணப்பதாகிய நம் நாட்டுமுறையே மிகச் சிறந்ததெனப் பறையறைந்து கூறலாம்.

மனோன்மணி:—நேரமாய்விட்டது. வீட்டுக்காரியங்கள் வெகுவாக இருக்கின்றன. வாருங்கள் போவோம். (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
சித்தூர்.

குறிப்பு:—ஒரு வாலிபப்பெண் கல்விகற்றவளாயினும் உலக அனுபவம் சற்றும் அறியாத அக்காலத்தில் தனக்குத்தக்க கணவனைத் தானே தேர்ந்தெடுக்கும் சக்தியுடையவளாக இருக்கமாட்டாள் என்பது உண்மை.

பெண்கள் தாம் பிரியப்பட்டவனை மணக்கும் வழக்கமுள்ள மேல் நாடுகளில் சில பெண்கள் அந்தஸ்திற்கும் செல்வத்திற்கும் ஆசைவைத்து வயோதிக ஆடவரை மணந்துகொள்கிறார்கள். ஆனால் பெரும்பாலும் அவர்கள் அந்த வயோதிகன் சீக்கிரம் மரிக்கவேண்டுமென்று பிரார்த்தனை செய்துகொண்டிருந்து மரித்ததும் செல்வத்தைக் கைப்பற்றிக்கொண்டு தங்களுக்குப் பிரியமான வாலிப புருடனை மணந்துகொள்கிறார்கள். இது பாதகச் செயலேயாகும்.

பத்திரிகாசிரியர்.

## பகவத்கீதை வசனம்.

(111-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 14-வது *குணாதீதவத்தியாயம்.

[முன்பு க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞாது சம்யோகத்திற்கு ஈசுவராதீனத் தன்மையுளதென்றும், அதில் குணசங்கத்தையே ஜன்மத்திற்குக் காரணமென்றும் அருளிச் செய்ததால், இப்போது எந்த எந்த குணத்தில் எந்த எந்தப் பிரகாரமாக சங்கமுளதென்பதையும், அக்குணங்கள் எவை யென்பதை

* இதற்கு வடமொழியில் "குணத்திரயவிபாகயோகம்" என்று பெயர்.

யும், அவை எவ்வாறு ஜீவனைப் பந்திக்கின்றன வென்பதையும், சத்துவாதி குணங்களினின்றும் அதிகாரிக்கு எவ்வாறு மூத்திபுளதாமென்பதையும், மூத்தனை புருஷனுடைய லட்சணங்கள் எவை யென்பதையும் விவரமாக அருளிச்செய்யும்பொருட்டு பகவான் இப்பதினான்காவது அத்தியாயத்தை யாரம்பிக்கிறார்.]

ஏ பார்த்த! மிக்க உத்தமமானதும் சிரேஷ்டமானதுமாகிய ஞானத்தின் சுபாவமான அநுஷ்டானத்தால் என்னை அபேதமாகவடைந்த ஞானிகள் சிருஷ்டிகாலத்தில் மறுபடி-பிறவார்கள்; பிரளயகாலத்தில் இறவார்கள். இந்த்ஞானத்தின் சுபாவம் எத்தன்மையதென்று வினவுவாயாயின் அதனையும் இனிக் கூறுதும் கேட்பாயாக.

ஏ புண்ணியத்தையுடைய அர்ச்சுன! சத்துவாதி மூக்குணங்களால் பேதமாகப் பரிணமங்களை யடையும் எனது மாயையே கர்ப்பாதானத்தின் தானமாம். அம்மாயையில் நான் (உலகைச் சிருஷ்டிக்க வேண்டும் என்னும்) சங்கற்ப ரூபமான கருப்பத்தைத் தரிப்பிப்பேன். அதனானே பூதங்களனைத்தும் உற்பத்தியாகும்.

இவ்வாற்றால் நால்வகையோனிகளுமுண்டாகும். தேவர், மநுடர் முதலிய எல்லாச் சரீரங்கட்கும் அம்மாயையே மாதாவடிவினளாவள். பரமேசுவரனாகிய நாமே கர்ப்பாதான கர்த்தாவான தந்தையாகும்.

(பரமேசுராதீன பிரகிருதி புருட சம்பந்தத்தால் பிராணிகளின் உற்பத்தியை நிரூபணம் செய்தபின் பிரகிருதியாகிய மாயை சீவனுக்குப் பந்தத்தை யுண்டாக்குவதைப்பற்றி பகவான் அருளிச்செய்கின்றார்.)

ஏ திண்ணியபுயங்களையுடைய பார்த்த! நாம் கூறிய மாயையாகிய மூலப் பிரகிருதி மூக்குணங்களையுடையது. அம்மூக்குணங்களையுடைய மாயையானது சீவான்மாவைப்பற்றி பந்தித்துள்ள விதத்தை அறிவிக்கிறோம்.

அம்மாயையின் மூன்று குணங்களுக்கும் சத்துவம், இராஜசு, தமசு என்று பெயர். இவையே சுகதுக்காதிகளான சகல பலன்களையும் ஜீவனுக்களிப்பனவாகும். அத்தகைய சத்துவாதி குணங்களின் செயல்களைக் கூறுவோம் கேட்பாயாக.

இந்த மூன்று குணங்களில் சத்துவகுணம் நிர்மலத் தன்மையால் படிகத்தை யொத்தது. சொச்சமானதால் பிரகாசமுடையது. ஞானத்தையுண்டுபண்ணத்தக்கது. சாந்தமுடையதாதலின் துக்கமற்ற சுகமானது. இது சுகதுக்கத்தாலும் ஞானசங்கத்தாலும் ஆன்மாவைப் பந்திக்கின்றது. இது பிரகாசமுடையதாதலால் மூலப்பிரகிருதியின் தமோகுணத்திலுதித்த ஆவரணமாகிய இருளையழிக்குந் தன்மையுடையது.

இராசோகுணம் இராகரூபமுடையது. (கிடையாத வஸ்து கிடைக்க வேண்டுமென்னும் ஆசையையும், கிடைத்த வஸ்துவில் பிரீதியையும் உண்

டாக்குவது.) காவிக்கல்போன்ற (சிவந்த) நிறம்பொருந்தியது. இது இலௌகிக வைதிக கர்மங்களோடு ஜீவான்மாவைப் பந்திப்பதற்கு ஏது வாகவிருப்பதாகும்.

தமோகுணம் கறுநிற முடையது. அஞ்ஞானத்திற் கேதுவானது. மயக்கம், சோம்பல், நித்திரை யிவற்றால் ஜீவான்மாவைப் பந்திப்பது.

ஏ கீர்த்திபொருந்திய அர்ச்சுனா! சத்துவகுணமானது ஆன்மாவைச் சுகத்திற் பொருத்துகிறது. இரசோகுணம் கர்மங்களில் பொருத்தும். தமோகுணம் ஞானத்தை மறைத்து அறியாமையாகிய அஞ்ஞானத்தில் பொருத்துவிக்கும் என்று உணர்வாயாக.

இந்த மூன்று குணங்களும் மாறிமாறித் தத்தம் காரியங்களைச் செய்யும். இவற்றில் ஒன்று மேலெழும்போது மற்றையிரண்டும் கீழடங்கும். சத்துவம் மேலெழும்போது இரஜசு தமசு என்ற இரண்டு குணங்களும் கீழடங்கிவிடும். இரஜோகுணம் மேலெழும்போது சத்துவ தமோகுணங்கள் கீழடங்கிவிடும். தமோகுணம் மேலோங்கின் சத்துவ இரஜோகுணங்கள் கீழடங்கிவிடும்.

(கவனம்வைத்து நோக்கின் இதை யனுபவமாக வுணரலாகும். இந்த மூன்று குணங்களின் விருத்திகள் இத்தன்மையவென வறிந்தாலன்றி அவற்றில் நீக்கவேண்டியவற்றை நீக்கவும் கொள்ள வேண்டியவற்றைக் கொள்ளவும் ஒருவரால் இயலாது. ஆதலின் பகவான் அக்குணங்களின் சுபாவத்தைக் கூறுகிறார்.)

ஏ பார்த்த! எப்போது அறிவின் பிரகாசம் மிகுந்து நிறைந்த சாந்தம் தோன்றுகிறதோ, அதுவே சத்துவகுணம் என்று அறிதி. கருமங்கள் செய்வதில் மனம் நாடி ஆசையானதுண்டாகி லோபகுணம் வந்தடையின் அப்போது இரஜோகுணம் மேலோங்கியதென்று அறிவாயாக. ஒரு கருமத்தைப்பற்றி சிந்திக்கையில் இது தக்கது தகாதது என்று அறியாத போதும், சோம்பல், மயக்கம், உறக்கம் இவை நேரிடும்போதும் தமோகுணம் அதிகரித்ததென்று உணர்வாயாக.

(இப்போது மரணகாலத்தில் விருத்தியடைந்துள்ள சத்துவாதி குணங்களின் பலனைப்பற்றி பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ கிரீடி! மரணகாலத்தில் சத்துவகுணம் மேலோங்கியிருக்கப்பெற்றோர் தேவயோனிகளில் ஜனிப்பார்கள். இரஜோகுணம் மேலோங்கியிருக்கும் காலத்தில் இறந்தோர் மனிதயோனிகளிற் பிறப்பார்கள். தமோகுணம் விருத்தியடைந்திருக்கையில் மரித்தோர் மிருகாதி மூடயோனிகளிலே பிறப்பார்கள். இச்சத்துவாதி குணங்களின் வேறு பயன்களையும் நீயறியும்படி உரைக்கிறோம் கேட்பாயாக.

சாத்துவிக தர்மத்தின் பலம் நிர்மலமானதாம். இராஜஸ தர்மத்தின் பலம் துக்கத்தை யனுபவித்தலாம். தாமஸதர்மத்தின் பலம் அஞ்ஞான

மாம். மேலும் சத்துவகுணத்தினின்றும் ஞானமுண்டாம். இராஜோ குணத்தினின்றும் உலோபமுண்டாம். தமோகுணத்தினின்றும் மோகங்களும் அஞ்ஞானமுமுண்டாம்.

எப்போதும் சுத்தமான சத்துவகுணத்தைப் பிரதானமாகவுடைய மனிதர் மேலுலகமாகிய பரலோகத்தை யடையாநிற்பர். மத்தியகுணமாகிய இரஜோகுணத்தைப் பிரதானமாகவுடையோர் மத்திய உலகில் மானுடஜன்மமாய் வாழ்வார்கள். அதமமாகிய தமோகுணத்தைப் பிரதானமாக உடையோர் அதோகதியாகிய பசுவாதி ஜன்மங்களை யடைவார்கள்.

ஏ பார்த்த! எவன் "இச்சத்துவாதி குணங்களே சர்வ கர்மங்களுக்கும் கர்த்தாவாம். வேறு கர்த்தாயில்லை. நான் அவற்றின் கர்த்தாவல்ல. நான் விகாரமற்றவன்" என்று அக்குணங்களையும் சாக்ஷியான ஆன்மாவாகிய தன்னையும் வேறு பிரித்தறிகிறானோ அப்புருடன் பிரம்மத்தன்மையை யடைகிறானதலின் அவன் முத்தியின்பத்தை யடைந்தவனாவான்.

.(அப்புருடன் எவ்வாறு முத்தியின் பெய்துவான் என்பதைப் பகவான் அருளிச்செய்கின்றார்.)

"ஏ பர்க்குண! இத்தேகத்தோடு கூடி சீவிக்கையிலேயே பிறப்பிறப்பிற்குக் காரணமாகிய இம் முக்குணங்களையும் மாயாமயம் என்றறிந்து அவற்றைப் பரித்தியாகம் செய்தவன் பிறப்பு மூப்பு இறப்பு என்ற இவற்றின் துக்கங்களனைத்தையும் பரித்தியாகம் செய்து மோட்சவின்பத்தை யடைகிறான்" என்று பகவான் அருளிச்செய்ததைக் கேட்ட அர்ச்சுனன் பின்வருமாறு வினவுகின்றான்.

அர்ச்சுனன்:—"ஏ பரந்தாமா! கடத்தற்கரிதாகிய இச்சத்துவாதி முக்குணங்களையும் கடந்த புண்ணியபுருடர்களின் சுபாவமும், அவர்கள் அக்குணங்களை யெவ்வித உபாயத்தால் கடந்தார்களென்பதையும், அவர்களது இலக்ஷணங்களாகிய குறிகளையும் அடியேற் கருளிச்செய்ய வேண்டுகிறேன்" என்றனன்.

(பகவான் முக்குணக்களைக் கடந்தவனது இலக்கணத்தை யருளுகின்றார்.)

பகவான்:—ஏ பார்த்த! மாயாமயமாகிய சத்துவம், இரஜசு, தமசு என்ற முக்குணங்களின் காரியங்களாகிய பிரகாசம், பிரவிர்த்தி (தொழில்) மோகம் இவற்றை அடையாதபோது இச்சித்தலும், அடைந்தபோது துவேஷித்தலும் செய்யாதவன் குணாதீதன் எனப்படுவான்.

(இப்போது அவன் சுபாவத்தை யருளிச் செய்கிறார்.)

அவன் உதாசீன புருடன்போல் இராகத்துவேஷங்களை யடையாதவனாய், அக்குணங்களோடு கூடியிருந்தே அவற்றால் அசைக்கப்படாதவனாக விருப்பன். மானம் அவமானங்களிலும், சுகதுக்கங்களிலும், மண் பொன்னிலும், சத்துரு மித்திரரிடத்திலும், ஸ்துதி நிந்தைகளிலும், சமதிருஷ்டி

புடையவனாகவிருப்பான். இக்குணங்களோடு எனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை, இவற்றையெல்லாம் பிரகாசிக்கும் ஆன்மாவே நான் என்ற திட நிச்சயமுடையவனே குணாதீதனாவன்.

(இனிப் பகவான், அந்த அதிகாரி எந்த உபாயத்தால் அம் முக்குணங்களைக் கடந்துவிடுகிறான் என்பதை யருளிச்செய்கிறார்.)

இவர்கள் எவ்வகையாலேனும், ஒப்புயர்வற்ற பரமேசுவரனாகிய என்னிடத்தில் வைத்த அனன்னிய பக்தி யோகத்தினால் சத்துவாதி முக்குணங்களையும் கடந்து நித்தியமாகிய மோக்ஷவீட்டை யடையாநிற்பர்.

ஏ பார்த்த! என்றும் கெடாத ஞானமும், அழியாத மோக்ஷமும், நிரதிசயமான ஆனந்தமும், சாசுவதமான தருமமும் என்னிடத்தினின்றே உண்டாகின்றனவாதலின் என்னிடத்து வைத்த நீங்காத அனன்னிய பக்தியினால் அதிகாரிக்கு மோக்ஷம் உளதாகும். (தொடரும்.)

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.



ஈடன்.

# ஓர் அறிவிப்பு.

இரயில் ஸ்டேஷன்களிலுள்ள ஹெக்கின்பாதம் கம்பெனியாரின் புத்தகக் கடைகளிலெல்லாம் நமது "ஆனந்தபோதினி" சஞ்சிகையும், நம்மால் பிரசுரிக்கப்படும் தமிழ் நாவல்களும், இங்கிலீஷ் நாவல்களும் மற்ற புத்தகங்களும் விற்கப்படும். ஆங்காங்குள்ள சந்தாதாரர்களும் ஏனையோரும் வேண்டிய புத்தகங்களை அக் கடைகளில் வாங்கிக்கொண்டால் நமக்குக் கடிதம் எழுதும் செலவும் தபால் கூலி முதலியவையும் மிச்சமாகும்.

# ஆனந்தபோதினி ஏஜெண்டுகள்.

இதனால் அனைவர்க்கும் அறிவிப்பது யாதெனில்:-ம-ள-ள-ஸ்ரீ, வேலூர் ர. வெங்கடாசல முதலியாரவர்களையும், ம-ள-ள-ஸ்ரீ, S. இராமாநுஜாசாரியா ரவர்களையும் நமது ஏஜெண்டுகளாக நியமித்திருக்கிறோம். தற்சமயம் வெங்கடசல முதலியார் தென் இந்தியாவிலும், இராமாநுஜாசாரியார் இலங்கைப் பிரதேசத்திலும் வேலை பார்த்து வருகிறார்கள். சந்தா சேர்வோர் ஏஜெண்டிடம் பணம் கட்டி இரசீதும் அதுவரை வெளியான சஞ்சிகைகளும் பெற்றுக்கொள்ளக் கோருகிறோம். இன்னும் வேண்டிய புத்தகங்கள் முதலியவற்றிற்கும் ஆர்டர் கொடுக்கலாம்.

சந்தாதாரர்கள் ஆனந்தபோதினியின் அபிவிர்த்தி விஷயத்

தில் நமது ஏஜென்டுகளுக்குத் தங்களால் கூடிய உதவி செய்வார்கள் என்று நம்புகிறோம்.

பினுங் சிங்கப்பூர் முதலிய அன்னிய நாட்டிலுள்ளோர் வேண்டியவற்றிற்கு முன் பணமனுப்பியே பெற்றுக்கொள்ள வேண்டும். வி-பி-யில் எதையும் அனுப்ப அனுகூலப்படாது என்று அறிவித்துக்கொள்கிறோம்.

நா. முனிசாமி முதலியார்,
பத்திராதிபர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(118-ம் பக்கத்தொடர்ச்சி.)

மலையாளி:—எந்தத் தப்பிதம் ?

கறுப்பண்ணன்:—அந்த ஆனந்தலிங்கை யிதில் சேர்த்ததுதான்.

மலை:—அதைத்தான் உன்னுடைய பெரிய தந்திரமும் சாமார்த்தியமும் புத்தி சாதுர்யமுமாகிய ஏற்பாடென்று மிகவும் மெச்சிக் கொண்டாயே.

கறுப்:-"நீ யதைப்பற்றி கேலி செய்வது அக்கிரமம். அத் தவறு நேர்ந்தது எவ்வாறெனின், போலீஸ் இலாகாவில் துப்பறிவதில் ஆனந்தலிங் என்ற பெயருடையவர்கள் இரண்டு ஆசாமிகள் இருக்கிறார்கள். ஒருவன் சாதாரணமானவன். அவனாயிருந்தால் நாம் ஏற்படுத்தி வைத்த ருசுவுகளைக்கண்டதே உடனே மனோகரனைப் பிடித்து கைது செய்துவிட்டிருப்பான். அதோடு அவன் காசாசையுடையவன். நமது எண்ணம் ஒரு கஷ்டமுமின்றி நிறைவேறிவிட்டிருக்கும். இன்னொரு ஆனந்தலிங் இருக்கிறானே அவன் மிகப்பிரக்கியாதி பெற்ற நிபுணன், சத்தியவான். நான் எப்படியோ புத்திபிசகி முன்சொன்னவனைவிட்டுவிட்டு பின் கூறியவனை யழைத்து வந்துவிட்டேன். கடைசியில் அவன் நமக்கு எமனாய்விட்டான்" என்றான்.

அதன் பிறகு மலையாளி, பவானியும் ஆனந்தலிங்கும் சவக்குழிக்குச் சென்று பார்த்தார்களென்று தான் கேள்விப்பட்டதாக கறுப்பண்ணனிடம் கூறினான்.

கறுப்பண்ணன்:—அவள் ஒருத்திதான் அம்பாலிகையின் அடையாளத்தை நிச்சயமாயறியக் கூடியவள்.

மலையா:—"ஆ! அப்படியாயின் அத் துப்பறிபவன் இதுகாறும் எல்லாம் அறிந்துகொண்டிருப்பான். அம்பாலிகை யுயிரோடிருக்கிறாள் என்று கூட அறிந்துகொண்டிருப்பான்" என்றான்.

கடைசியில் கறுப்பண்ணன்—அவன் அச்சுதன் சவத்தை யங்கு கண் டிருக்கவேண்டும்'' என்றான்.

மலை:—"இருக்கட்டும் அப்படி யவன் பார்த்தேயிருந்தான். அப்புறம் ?"

கறுப்:—பவானி இறந்தவன் பலானவன் என்று கூறிவிட்டிருப்பாள்.

மலை:—மறுபடி யதுவும் உண்மையே யென்று வைத்துக்கொள்வோம்.

கறுப்:—அப்படியிருந்தால் குற்றவாளிகள் யாரென்று அவன் சுலபமாய்த் தெரிந்துகொண் டிருக்கலாகும்.

மலை:—" உஃ பேசாதிரு" என்றான்.

அவன் முகத்தில் ஒருவித குரூரமான பிரகாசம் உண்டாயிற்று.

கறுப்:—என்ன ஆபத்திருக்கிறதோ கவனிப்போம்.

மலை:—அச்சுதன் தற்கொலை புரிந்துகொண்டான். அவ்வாறே நம்பப் படுகிறது.

கறுப்:—ஆம் பொது ஜனங்களால்.

மலை:—மற்றபடி யாருக்கு அதைப்பற்றி அக்கரை ?

கறுப்:—ஏன் ? ஆனந்தவலிங்குக்கு.

மலை:—சே! அவன் செத்தவனிற் கூட்டே. அவனை யொழித்துவிட வேண்டியதே.

இவ்வாறு இரண்டு துஷ்டர்களும் சம்பாஷித்துக்கொண் டிருந்தார்கள். அறையிலிருந்த தீபம் குறைந்த பிரககாசத்தோடே யெரிந்துகொண் டிருந்ததால் அறை முழுதும் வெளிச்சமில்லை. "அவனை யொழித்துவிட வேண்டியதே'' என்று மலையாளி கூறியபோது சட்டென்று திரும்பிப் பார்த்திருந்தால் கதவின் சந்தின் மூலமாய் ஒரு ஆள் தங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டிருப்பான். உடனே கொஞ்சம் சந்தடி கேட்டது.

இருவரும் திடுக்கிட்டு எழுந்தார்கள். இரண்டு நிமிடங்கள் இருவரும் மௌனமாயிருந்தபின் "உனக்கு ஏதாவது சத்தம் கேட்டதா ?" என்று கறுப்பண்ணன் தன் நண்பனைக் கேட்டான். மலையாளி "கேட்டாற் போல்தா னிருக்கிறது" என்றான்.

கறுப்பண்ணன் "இரு கவனிப்போம்" என்றான்.

அவ்வாறே யிருவரும் மௌனமாய்ச் சுமார் ஐந்து நிமிடம் உற்றுக் கேட்டார்கள். ஒரு சந்தடியுமில்லை.

மலையாளி "நாம் தவறாய் நினைத்துக்கொண்டோம்" என்றான். கறுப்பண்ணன் "அப்படித்தான் கருதுகிறேன்" என்றான்.

மலை:—நாம் இன்னது செய்யவேண்டுமென்று இந்த இரவே தீர்மானித் துக்கொள்ள வேண்டும். சற்றும் ஆலசியம் கூடாது.

கறுப்:—உன் யோசனை யென்ன ?
மலை:—நான்கு பேரை யொழித்துவிட வேண்டும். பிறகு பயமேயில்லை.
கறுப்:—முதலாவது யார் ?
மலை:—அம்பாலிகை.
கறுப்:—ஒருக்காலுமில்லை.
மலை:—மற்ற எல்லாரையும்விட அவள் ஒழியவேண்டியதே பிரதானம்.
கறுப்:—என் ?
மலை:-அவளை யந்த சவப் பெட்டியிலேயே யடக்கம் செய்துவிடவேண்டும்.
கறுப்:—நான் ஒருபோதும் அதற்குச் சம்மதிக்கமாட்டேன்.
மலை:—அப்படியானால் நமது எண்ணம் அடியோடு கெட்ட மாதிரியே. நீ யப்பெண்ணின் மேல் வைத்திருக்கும் காதலால் நமக்குக் கிடைக்கும் ஆஸ்தி யடியோடு போய்விடும்.
கறுப்:—அவள் மடியவேண்டியது அவ்வளவு அவசியமென்று எனக்குத் தோன்றவில்லை.
மலை:—அது முக்கிய அவசியமானது. நாம் மனோகரனை யொழித்துவிடலாம். பவானியையும் ஒழித்துவிடலாம் அந்த ஆனந்தலிங்கை யொழிப்பது சந்தேகம். அம்பாலிகையையும் ஒழித்துவிட்டால் பிறகு அவனுக்கு நாம் அஞ்சவேண்டியதில்லை. நம் மேல் குற்றம் சாட்டவாவது சாட்சி கூறவாவது ஒருவருமில்லாத வரையில் அவனால் ஒன்றும் செய்ய முடியாது.
கறுப்:—நான் இப்போது முடிவாய் ஒன்றும் கூறமாட்டேன்.
மலை:—இது ஆலசியம் செய்யத்தக்க சமயமல்ல.
கறுப்:—" மனோகரனை யொழித்துவிட்ட பிறகு இதைப்பற்றி யோசிக்கலாம்" என்றான்.

மலையாளி யதற்குப் பதில் கூறுவதற்குள் இரண்டு துஷ்டர்களும் திப்பிரமை யடையத்தக்க ஒரு சம்பவம் நேர்ந்தது. அதாவது,

அறைக்குள் "ஐயன்மீர் உங்களுக்கு வந்தன மளிக்கிறேன்" என்று நிதானமும் உறுதியுமான குரலில் ஒரு சத்த முண்டாயிற்று.

இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள். எதிரில் நிற்கும் உருவத்தைக் கண்டதே அலறிக்கொண்டே துள்ளியெழுந்து நின்று இரண்டொரு நிமிடங்கள் விழி பிதுங்கிவிடுவதுபோல் பார்த்தார்கள். அவர்கள் மனோநிலைமை யின்னவிதமென்று சொல்லமுடியாது. முகங்கள் சாம்பல் நிறமடைந்தன. கை கால்களை யசைக்கவும் கூடாதவர்களாய் ஸ்தம்பித்துவிட்டவர்கள்போல் நின்றார்கள்.

இவ்வளவிற்கும் காரணமாகிய மனிதன் அறையின் மத்தியில் நிற்கிறான். இருவர் கண் பார்வையும் அவனைவிட்டு நீங்கவில்லை. அவ்வாறு அறையின் மத்தியில் நிற்பவன் இவர்கள் இறந்து போனானென்று எள்ளளவு ஐயமுமின்றி நம்பிக்கொண்டிருக்கும் அச்சுதன் என்பவனே.(தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

# பொது சமாச்சாரங்கள்.

## கலியுக அர்ஜுனன்.

குண்டூர் வாசியாகிய புரபசர் ஜி. வி. அப்பாராவ் என்பார் வில் வித்தையில் தற்காலத்து அர்ஜுனன் என்று சொல்லும்படியாகப் பயின்றிருக்கிறாராம். அவர் இப்போது இரங்கூனில் தமது வித்தையின் திறத்தைக் காண்பிக்கிறார். அவர் செய்யும் பலவித வில் வித்தை வேலைகளில் கீழ்க் கண்டவையு மடங்கும்:—

1. சப்தபேதி. வில்லாளியின் கண்ணைக் கட்டிவிட்ட பிறகு யாதோரிடத்திலிருந்தும் வரும் சப்தத்தைக் கேட்டு அந்தக் குறியை நோக்கி அம்பெய்தல். இது தசரத சக்ரவர்த்தியாலும் பிருதிவி ராசனாலும் செய்யப்பட்டது. 2. ஒரு மனிதனது இரண்டு கண்களின் மேலில் இரண்டு ரூபாய்களை வைத்து மனிதன்மேலிற்படாமல் ரூபாய்களை அம்பினால் வீழ்த்துதல். 3. ஏககாலத்தில் குறி தவறாமல் கைகளினாலும் கால்களினாலும் எதிரெதிராக எய்தல். 4. மச்சயந்திரம். மேலே கட்டித் தொங்கவிட்ட மச்ச உருவத்தின் பிரதிபிம்பத்தை கீழேயிருக்குங் கண்ணாடியில் நோக்கி அம்பெய்து வீழ்த்துதல். துரோபதை சுயம்வரத்தின்போது இது அர்ஜுனனால் செய்யப்பட்டது. 5 மனோ தந்தி கண்ணுக்குத் தெரியாது மறைவில் வைக்கப்பட்ட ஒரு குறியை மனதினால் தியானித்து அம்பெய்தல். 6. ஒரு மனிதன் கையில் உயரத் தூக்கிப் பிடித்துக்கொண்டிருக்கும் எலுமிச்சம் பழத்தை நோக்கி, மனிதன்மீது படாமல், அம்பெய்தல். 7 நமஸ்கார பாணம். பலவகைத்தான வணக்கங்களைப் புரியும்படி பாணம் தொடுத்தல். இது அர்ஜுனனால் மாத்திரம் செய்யப்பட்ட சிறந்த வேலையாகும் 8. மேலெறியப்படும் கொம்புகளை அம்புகளால் தடுத்தல். 9 சப்த தல பந்தனை. பாம்பு வளைவாய் நடப்பட்டிருக்கும் ஏழு கொம்புகளை ஒரே அம்பினால் எய்து வீழ்த்துதல். இது மேற்கூறியபடி வளைவாய் நின்ற பனைமரங்களின் பின்னால் மறைந்திருந்த வாலியை இராமர் கொன்றபோது காட்டிய செயலாகும்.

மற்றும் இரும்புச் சங்கிலி யறுத்தல், வண்டிகளைப் பல்லினால் கடித்திழுத்தல், மார்பின்மீது கருங்கல் வைத்துடைத்தல் முதலிய திறமைகளும் செய்வாராம்.

---

மலையாளத்தில் ஒரு கோயிலில் பிரதிதினமும் 1000 பேர்களுக்கு சமாராதனை செய்கிறார்களாம். உண்டபின் எச்சில் இலைகளை எண்ணினால் 1001 இருக்கிறதாம். இவ்வொருவன் யாரென்று இதுவரையில் தெரியவில்லையாம். இவ்விதமாக 1000 இலைகள் போட்டு, 1001 இலைகள் வெளிவரும் விநோதம், பல ஆயிரம் வருடங்களாக, நடந்து வருகிறதெனச் சொல்லுகிறார்கள். (அது எந்தக் கோயில் என்பதை யறிந்தோர் தெரிவிக்கக் கோருகிறோம் ப-ர்.)

---

பெரிய மணி—உலகத்தில் உள்ள மணிகளில் மிகப் பெரியது ஜபான் தேசத்தில் ஒஸாகா நகரிலுள்ளது. அந்த மணி 24 அடி உயரமும் 200 டன் (1 டன்=2240 ராத்தல்.) பாரமுமுடையது.

---

உயரமான கட்டிடம்—அமெரிக்காவின் தலைநகரமாகிய நியூயார்க்கிலுள்ள உயரமான கட்டிடம் 792 அடி உயரம். அதைக் கட்ட நேர்ந்த செலவு 30 இலட்சம் பவுன் (நாலரைகோடி ரூபாய்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ரக்தாக்ஷி௵ கார்த்திகை௴-கலியுகாதி 5026 சாலிவாகனம் 1847,
பசலி 1334—கொல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1343,
இங்கிலீஷ் 1924௵ நவம்பர்௴—டிசம்பர்௴

| கார்த்திகை | நவம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | ஞா | பஞ்59-28 | புன60 | சித்60 | கரிநாள் |
| 2 | 17 | திங் | சஷ்60 | புன7-38 | அ7-38சித் | கரிநாள் [34-13 |
| 3 | 18 | செவ் | சஷ்5-25 | பூச14-35 | சித்60 | அனுஷா கார்த்திகை |
| 4 | 19 | புத | சப்10-18 | ஆயி20-33 | சித்60 | கிருஷ்ணாஷ்டமி, கால பைரவாஷ்டமி |
| 5 | 20 | வியா | அ13-30 | மக24-45 | அ24-45சி | கதிர றுக்க |
| 6 | 21 | வெ | நவ14-45 | பூரம்27-0 | சித்60 | மாடுகொள்ள |
| 7 | 22 | சனி | தச13-40 | உத்27-5 | மர60 | தனுராயனம் 32-33 |
| 8 | 23 | ஞா | ஏகா10-28 | அஸ்25-0 | அ25-0சித் | மத்வ சர்வ ஏகாதசி |
| 9 | 24 | திங் | து 5-10<br>திர58-18 | சித்20-58 | பி20-58அ | பிரதோஷம், அவமாகம், யமதீபா |
| 10 | 25 | செ | சது50-10 | சுவா15-23 | சி15-23ம | கரிநாள், மாசசிவராத்திரி |
| 11 | 26 | புத | ●11-10 | விசா8-40 | சித்60 | அமாவாசை |
| 12 | 27 | வியா | பிர31-45 | அனு1-23<br>கேட்53-55 | சி1-23பி | |
| 13 | 28 | வெ | துதி22-30 | மூல46-43 | அ16-43பி | |
| 14 | 29 | சனி | திரி13-55 | பூரா40-20 | சித்60 | |
| 15 | 30 | ஞா | சது6-18<br>பஞ்59-58 | உத்35-3 | அமி60 | |
| | 1924௵ டிசம்பர்௴ | | | | | |
| 16 | 1 | திங் | சஷ்55-10 | திரு31-15 | அ31-25சி | |
| 17 | 2 | செ | சப்51-58 | அவி29-0 | சி29-0மர | |
| 18 | 3 | புத | அ50-33 | சத28-30 | சி28-30அ | |
| 19 | 4 | வியா | நவ50-40 | பூர29-38 | சித்60 | |
| 20 | 5 | வெ | தச52-18 | உத்32-13 | சி32-13அ | சர்வமுகூர்த்தம |
| 21 | 6 | சனி | ஏ55-10 | ரேவ36-5 | மர36-5சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 22 | 7 | ஞா | து59-10 | அசு-40-58 | சித்60 | மச்ச துவாதசி |
| 23 | 8 | திங் | திர60 | பரணி46-48 | சி46-48ம | பிரதோஷம் |
| 24 | 9 | செவ் | திர3-50 | ※கிரு53-23 | அ53-23சி | கிருத்திகை, அண்ணாமலையார் தீபம் |
| 25 | 10 | புத | ச○9-23 | ரோ60 | சித்60 | பௌர்ணமி, விஷ்ணு தீபம் |
| 26 | 11 | வியா | பவு15-20 | ரோ0-13 | மர60 | பிரயாணம் விலக்க |
| 27 | 12 | வெ | பிர21-48 | மிரு7-35 | சித்60 | மார்க்கசிரபகுளம் |
| 28 | 13 | சனி | துதி28-25 | திரு15-15 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 29 | 14 | ஞா | திரி34-55 | புன22-50 | சித்60 | மூலாகார்த்திகை 51-48 தனுசுரவி நா-51-48 |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ | 6உ துலா-சு<br>12, தனு-பு<br>21 ,, மீன-செ | | ராகு |
| கே | | | |
| குரு | சூரி<br>புத | சனி | சுக் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.